உ

கடவுள் துணை.



# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி ௧௯.] துர்மதி-ஸு ஆவணி-மீ [பகுதி ௧௦.

Vol. XIX August—September—1921. No. 10.

உள்ளுறை.



பத்திராதிபர்—திரு. நாராயணையங்கார்.

மதுரைத்தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்
பதிப்பு.

வருஷம் ஒன்றுக்கு ரூ. 4.] [தனிப்பிரதி அணா-8.
வெளிநாடுகளுக்கு ரூ. 4—8—0.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி ௧௯.] துர்மதி-௵ ஆவணி-௴ [பகுதி ௧௦.

Vol. XIX. August—September—1921. No. 10.

## இறந்துகொண்டுவரும் தமிழ்த்தொன்னூல்கள்.

### முன்னுரை:

திருவருளால் இன்றளவும் உலகவழக்கிலும் ஓங்கிநின்றுநிலவும் தமிழ்மொழியிலே, பண்டைக்காலப் பெருந்தகையாளர் பலர் அரியபெரிய இலக்கண இலக்கியத்தொகுதிகளை அக்காலவியல்பிற்கேற்ப மனனஞ் செய்வதற்கெளிதாம்நிலையிற் செய்யுளாகத் திட்பநுட்பமுடன் யாத்துப் பின்னோர்க்கு உலவாவைப்பாக என்றும் நிலவுதற்பொருட்டாகப் பனை யோலைகளிலும் தாழைமடல்களிலும் எழுதிப் போற்றி யளித்துப்போயினர்.

அங்ஙனமளித்தருளிய நூல்களுள் ஒருசில, எடுப்பாரும் எழுதுவாரும் படிப்பாரும் பாவிப்பாரும் அற்றுக் காலப்பழமையாற் செல்லரித்து இராமபாணங்களாற் றுளைப்புண்டு உட்கி மட்கிப் பெயரளவினவாகி விட்டன. சில அடி நுனியற்று முற்றும் கிடைப்பதற் கரியனவாய்விட்டன. இன்னும் சிலநூல்கள் ஒப்புநோக்கிக்கொள்வதற்குங்கூட யாண்டும் அத்தகைய பிறிதொன்று கிடைப்பதற்கரியநிலையில் அருகிவிட்டன. அத்தகைய நூல்களுள் அடியிற்குறிக்கப்படுவனவும் சார்ந்தனவாகும். அவையாவன:-

1. "தத்துவரத்நாகரம்"
2. "ஊசி முறி" "ஆறைப்பொயிலான் உரை"
3. "மாறனிகண்டு"
4. "நாமதீபநிகண்டு"-பழைய உரை

5. "கைந்நிலை"

6. "பரிநூல்"

7. "தொல்காப்பியப்பொதுப்பாயிரம்" ஆத்திரேயன் பேராசிரியன் உரை.

8. "சிறுகுரீயுறை"

9. "சங்கர விலாசம்"

10. "மடல்"

11. "கொண்டல்விடுதூது"

12. "சிலபிரபந்தங்கள்"

என்பனவாம். இவையன்றி,

1. மாறன் அகப்பொருள்.

2. தொல்காப்பியச் சொல்லதிகாரம் கல்லாடனார் உரை.

3. ஷை ஷை பேராசிரியர் உரை.

4. பெருங்கதை.

முதலியன அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தென்னாடுகளிலும் வடநாடுகளிலும் ஒருபிரதிக்கு அதிகமாகவேனும் கிடைக்கின்றமையால் இங்கு அவை எண்ணமுற்றில. நிற்க;

மேற்காட்டியவற்றுள், தத்துவரத்நாகரம் என்பது ஒருசைவ சித்தாந்த இலக்கணநூல்: ஏனையமதங்களையெடுத்தோதி அவற்றின் நிலைமையினை உள்ளவாகண்டு மறுத்துரைத்துச் சுத்தசைவத்தை நிலைநாட்டுவது. சிவஞானசித்தியார்முதலிய சித்தாந்தநூல்களைவிட விரிவாயது.

இந்நூல் 13½ அங்குல நீளமும் 1⅝ அங்குல அகலமுமுள்ள பனையோலையில் எழுதப்பட்டுள்ளது. 188 இதழ்களை (அதாவது 376 பக்கங்களை) யுடையது. இவ்வேடு இற்றைக்கு 221 ஆண்டுகளுக்குமுன் (அதாவது கொல்லம் ௮௱௭௰௯ ௵ ஆவணி ௴ ௨௪) முருகன் மாறியாடும்பெருமாள் என்பாரால் எழுதப்பட்டது. **1043** விருத்தங்களையுடையது.

## இறந்துகொண்டுவரும் தமிழ்த்தொன்னூல்கள் ஈகரு

இந்நூலை யருளியவர், "கோகழியடிகள்" என்பாரொருபெரியார். இந்நூல், திருநெல்வேலி ஈசானமடாலயத்திற் சின்னப்பட்டம் சூட்டப் பெற்ற சுவாமிநாததேசிகர் (இலக்கணக்கொத்து நூலாசிரியர்) சங்காபி ஷேகம்பெற்றகாலத்துத் திருவாவடுதுறையிலிருந்து, அவர் சித்தாந்த வுண்மை அறிந்துகோடற்காக மயிலேறும்பெருமாள்பிள்ளை என்னும் தனிகரொருவரால் தென்னாட்டுக்குக் கொண்டுவரப்பட்டது.

காலாந்தரத்தில் இவ்வேடு அத்தனிகர்கால்வழியினர்வசமாகி இக் காலத்தே போற்றியாதீனபரம்பரையாரொருவர்மூலம் கொற்கையிற்கிட்டி யது. இராமபாணமுற்ற இப் பழையவேடு கிடைத்து ஒன்பது வருடங் களுக்கு அதிகமாயிற்று. அதுமுதல் இதுவரை பாணம் உழுதபொட் டுக்களை ஒப்புநோக்கிக்கொள்வதற்காகப் பிறிதோர்பிரதியொன்று தேடி யலையலுற்றேன். தருமபுரமடம், சொர்க்கபுரமடம், திருவாவடுதுறை மடம் முதலிய மடங்களிலும், தென்னாடு வடநாடுகளில் யானறிந்த இடங் களிலும் சென்றுதேடியும் தேடுவித்தும் வேறுபிரதியொன்றும் கிட்டி லது. கிடைத்த இவ்வொருபிரதியைப்பற்றித் திருவாவடுதுறைப் பண் டாரசந்நிதி ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிகமூர்த்திகளிடம் அறிவித்ததில் அன்னோர் இவ்வேட்டைப்பார்வையிட்டுத் தாமே அச்சிடுவதாய் வாக் களித்தனர். அடுத்து, ஏட்டில் உள்ளவா பெயர்த்தெழுதி ஒப்புநோக்கி ஆய்ந்து அச்சிற்கு இலக்காய்ப் பிரதி தயாரானவேளை இந்நூலின் தௌர்ப்பாக்கியநிலைபோலும் அச்சிட வாக்களித்தார் சிவசாயுச்சிய நிலைபெற்றனர். இந்நிலையிற் காகிதவிலையேற்றமும், இதுவரை இந் நூலைத் தேடியெடுத்து எழுதிச் செப்பஞ்செய்யநேர்ந்தபொருட்செலவும், காலநிலையும் அச்சுறுத்த, அச்சிடவியலாமற் கட்டிவைத்துள்ளேன்; அச்சிடவிரும்புவார்க்கு அளிக்கவிரும்புகிறேன்.

இந்நூலின் விஷயசூசிகையால் இந்நூலின்பெருமையும், பொருளு ரையின்போக்கும் பரப்பும் நன்கு புலனாமாதலின் வேறு எடுத்தோதாது விடுத்தேன்.

பெயர்விழையான்,

தச்சநல்லூர்.

---

ஸ்ரீ

# தத்துவரத்நாகரம்.

## விஷயசூசிகை.*



* இதிற்கண்ட விடயப்பெயர்கள் எழுதியபடியே பதிக்கப்பட்டன. பிழையுள்ளவற்றைத் திருத்திக்கொள்ளவேண்டும். பத்திராதிபர்.

| | |
|---|---|
| இரகசியகாயசித்தி | ஓர்பிறப்படையானுக்கம் |
| சாதகாதிகாரம் | பிறவிமாறுமருந்து |
| காயசித்திநுணுக்கம் | சிவஞானமகிமை |
| சாதகதலம் | நரகடைவோர் |
| சாதகரியக்கம் | திரநிலைபெறுவோர் |
| காலசயம் | முத்திபெறுவோர் |
| இரகசியசாதனை | வீட்டுவிளக்கஞ் (சார்வு) |
| ஆயுளேற்றம் | எண்ணின்முத்தி |
| காயம்அழியாவகை | ஒடுக்கோபதேசம் |
| ஞானசித்தி | முத்திப்பொருள் |
| அட்டசித்திரகசியம் | மெய்ஞ்ஞானபோதபூரணம் |
| விளக்கம் | தத்துவரத்நாகரப்பொருள் |
| ஞானசித்திவகை | உயர்நிலை |
| விளக்கம் | |

௨

# தென்னாட்டாரும் சோதிடமும்.

சோதிடம் வேதாங்கங்களிலொன்றென்றாலும் வேதமும் அதனங்கங்களும் வடநாட்டினின்று தென்னாடுபுகுமுன் தெற்கின்கட் குடியேறியோ வெகுபழமையாகவோ இருந்த மனிதர்களுக்கு வானசாத்திரமும், அதன்காரியமான சோதிடமும் இருந்தனவோ இல்லையோ வென்றவினா ஒன்று, பண்டித சுப்பிரமணிய சாஸ்திரிகளது ஆராய்ச்சியை வாசித்தபிறகு உண்டாவது தமிழ்மக்களனைவருக்கும் இயற்கையேயாம்.

எக்காலத்தும், எங்கே மானிடவுற்பத்தி யுண்டாயிற்றோ அங்கே, தம்மைச்சுற்றியுள்ள பொருள்களைப்பற்றி யாராய்ச்சிசெய்தல் பலருக்கின்றேனும் சிலருக்காவது உண்டாதல் இயற்கைக் குணங்களிலொன்றாம். அவ்வாறாகப் பழைய தமிழ்க்காவியங்கள் கூறியது ஒருபுறமிருக்க, கீன் (Keene) முதலிய தற்போதைய ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் தென்னாடு ஒருகாலத்தில் வெகுதூரம் சமுத்திரத்திற் பாவியிருந்ததென்றும் இந்நாடுதான் மற்றையநாடுகளுக்குத் தாய்நாடாக விருந்திருக்கவேண்டுமென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். இந்நாட்டிலிருந்த அக்காலத்தவர் தங்கள் கண்ணுக்குப் புலப்பட்ட சூரியன்; சந்திரன் நட்சத்திரங்கள் இவைகளை யன்றிக் கவனியாமலிரார். அங்ஙனமாயின் அவர்கள் தங்களது

மனதுக்குத் தோன்றியதையும், பலநாள் கண்ணுற்றதையும் குறித்து வையாமலிரார். அப்படி யதேனும் குறித்துவைக்கப்பட்ட நூல்கள் இருக்கின்றனவா என்று கவனிக்கவேண்டியது நமது முதற்கடமை யாகும். "ஒருநாட்டார் அறிவுடையமக்களாயிருந்து பலவிதமான நூல்களை யியற்றியிருப்பார்களேயானல் அவர்கள் பிற்காலத்தில் இறந்தாலும் அவர்கள் எழுதிவைத்த நூல்களிற் சிலபாகங்களாவது அங்குமிங்கும் காணப்படலாம். இப்பொழுது அகத்தியம் இறந்துபட்டதாயினும் அதிலிருந்து ஒன்றிரண்டு சூத்திரங்கள் அங்குமிங்கும் காணப்படுகின்றன. அதுபோலவாவது இங்குக் காணப்படவேண்டிய தவசிய" மெனவாதிப்பர் தென்னட்டாருக்கு அச்சுவடியே இல்லையென்போர்.

பொதுவாக, நாகரிகமும் அதன்மேலேற்பட்ட ஆராய்ச்சியும் மிக்க இக்காலத்து, மேனட்டாரும் அவரைப் பின்பற்றியோரும், சாஸ்திரங்களெல்லாம் மேனட்டிலிருந்து இந்நாட்டிற்குவந்தனவென்பர். அந்நாட்டிலிருந்து இந்நாட்டிற்குக் கணிதம்,எழுத்து, சோதிடம வானசாத்திரம் முதலாயின வருமுன்னர் இந்நாட்டில் இவைகள் இல்லையா? இந்நாட்டார் எண்ண, எழுத அறியாமலிருந்தனரா? என்று அழுத்தமாகக் கேட்பாரில்லை. தமிழிலுள்ள கணிதமுதலியவற்றிலிருந்து ஆராய்ச்சி செய்து வெளியிடும் விஷயங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடுவார்களாயின், நம்பழந்தமிழ் கன்னித்தமிழ் உயர்தனிச்செம்மொழியன்றென யாவர் சொல்லத்துணிவர். தமிழும் உயர்தனிச்செம்மொழியாகுமோவெனப் பலரை ஐயுறும்படி செய்தவர்கள் காலம்சென்ற வெ. கனகசபைப்பிள்ளையவர்கள் எனலாம். இவை ஒருசார்புடையனவாகலான் இவ்வளவில் நிறுத்தி மேற்செல்வோம். வெகுபுராதனகாலமாக நாகரிகமுற்றதேசமென்றுசொல்லப்படும் கிரேக்க ரோம தேசங்களில் ரோமதேசத்தினரிற் பெண்டிர் நாம் வெளியிற்செல்லப் புறப்படும் காலங்கள் நல்லகாலங்களா என்று குறித்துச்சொல்ல இந்தியர்களை மாதநிவேதனத்திற் கமர்த்தி வாழ்ந்தனரென்று வாசிப்போமாயின் அது எந்நாட்டினரைக்குறிக்கும்? அக்காலத்து யவன கிரேக்க தேசத்தினரோடும் எகிப்தியரோடும் வியாபாரம் செய்தார் தென்னட்டினரான்றே? இங்ஙனமாயின், தென்னட்டினர் சோதிடம் சொல்லவல்லுனர் என்பதற்குப் புறச்சான்று இஃதொன்றன்றே?

இரகசியகாயசித்தி
சாதகாதிகாரம்
காயசித்திநுணுக்கம்
சாதகதலம்
சாதகரியக்கம்
காலசயம்
இரகசியசாதனை
ஆயுளேற்றம்
காயம்அழியாவகை
ஞானசித்தி
அட்டசித்திரகசியம்
விளக்கம்
ஞானசித்திவகை
விளக்கம்

ஓர்பிறப்படையாணுக்கம்
பிறவிமாறுமருந்து
சிவஞானமகிமை
நரகடைவோர்
திரநிலைபெறுவோர்
முத்திபெறுவோர்
வீட்டுவிளக்கஞ் (சார்வு)
எண்ணின்முத்தி
ஒடுக்கோபதேசம்
முத்திப்பொருள்
மெய்ஞ்ஞானபோதபூரணம்
தத்துவரத்நாகரப்பொருள்
உயர்நிலை

---

வ

# தென்னாட்டாரும் சோதிடமும்.

சோதிடம் வேதாங்கங்களிலொன்றென்றாலும் வேதமும் அதனங்கங்களும் வடநாட்டினின்று தென்னாடுபுகுமுன் தெற்கின்கட் குடியேறியோ வெகுபழமையாகவோ இருந்த மனிதர்களுக்கு வானசாத்திரமும், அதன்காரியமான சோதிடமும் இருந்தனவோ இல்லையோ வென்ற வினா ஒன்று, பண்டித சுப்பிரமணிய சாஸ்திரிகளது ஆராய்ச்சியை வாசித்தபிறகு உண்டாவது தமிழ்மக்களனைவருக்கும் இயற்கையேயாம்.

எக்காலத்தும், எங்கே மானிடவுற்பத்தி யுண்டாயிற்றோ அங்கே, தம்மைச்சுற்றியுள்ள பொருள்களைப்பற்றி யாராய்ச்சிசெய்தல் பலருக்கின்றேனும் சிலருக்காவது உண்டாதல் இயற்கைக் குணங்களிலொன்றாம். அவ்வாறாகப் பழைய தமிழ்க்காவியங்கள் கூறியது ஒருபுறமிருக்க, கீன் (Keene) முதலிய தற்போதைய ஐரோப்பிய ஆராய்ச்சியாளர் தென்னாடு ஒருகாலத்தில் வெகுதூரம் சமுத்திரத்திற் பரவியிருந்ததென்றும் இந்நாடுதான் மற்றைநாடுகளுக்குத் தாய்நாடாக விருந்திருக்கவேண்டுமென்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். இந்நாட்டிலிருந்த அக்காலத்தவர் தங்கள் கண்ணுக்குப் புலப்பட்ட சூரியன்; சந்திரன் நட்சத்திரங்கள் இவைகளை யன்றிக் கவனியாமலிரார். அங்ஙனமாயின் அவர்கள் தங்களது

மனதுக்குத் தோன்றியதையும், பலநாள் கண்ணுற்றதையும் குறித்து வையாமலிரார். அப்படி ஏதேனும் குறித்துவைக்கப்பட்ட நூல்கள் இருக்கின்றனவா என்று கவனிக்கவேண்டியது நமது முதற்கடமையாகும். “ஒருநாட்டார் அறிவுடையமக்களாயிருந்து பலவிதமான நூல்களை யியற்றியிருப்பார்களேயானால் அவர்கள் பிற்காலத்தில் இறந்தாலும் அவர்கள் எழுதிவைத்த நூல்களிற் சிலபாகங்களாவது அங்குமிங்கும் காணப்படலாம். இப்பொழுது அகத்தியம் இறந்துபட்டதாயினும் அதிலிருந்து ஒன்றிரண்டு சூத்திரங்கள் அங்குமிங்கும் காணப்படுகின்றன. அதுபோலவாவது இங்குக் காணப்படவேண்டிய தவசிய” மென வாதிப்பர் தென்னாட்டாருக்கு அச்சுவடியே இல்லையென்போர்.

பொதுவாக, நாகரிகமும் அதன்மேலேற்பட்ட ஆராய்ச்சியும் மிக்க இக்காலத்து, மேனாட்டாரும் அவரைப் பின்பற்றியோரும், சாஸ்திரங்களெல்லாம் மேனாட்டிலிருந்து இந்நாட்டிற்குவந்தனவென்பர். அந்நாட்டிலிருந்து இந்நாட்டிற்குக் கணிதம், எழுத்து, சோதிடம வானசாத்திரம் முதலாயின வருமுன்னர் இந்நாட்டில் இவைகள் இல்லையா? இந்நாட்டார் எண்ண, எழுத அறியாமலிருந்தனரா? என்று அழுத்தமாகக் கேட்பாரில்லை. தமிழிலுள்ள கணிதமுதலியவற்றிலிருந்து ஆராய்ச்சி செய்து வெளியிடும் விஷயங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடுவார்களாயின், நம்பழந்தமிழ் கன்னித்தமிழ் உயர்தனிச்செம்மொழியன்றென யாவர் சொல்லத்துணிவர். தமிழும் உயர்தனிச்செம்மொழியாகுமோவெனப் பலரை ஐயுறும்படி செய்தவர்கள் காலம்சென்ற வெ. கனகசபைப்பிள்ளையவர்கள் எனலாம். இவை ஒருசார்புடையனவாகலான் இவ்வளவில் நிறுத்தி மேற்செல்வோம். வெகுபுராதனகாலமாக நாகரிகமுற்றதேசமென்றுசொல்லப்படும் கிரேக்க ரோம தேசங்களில் ரோமதேசத்தினரிற் பெண்டிர் நாம் வெளியிற்செல்லப் புறப்படும் காலங்கள் நல்லகாலங்களா என்று குறித்துச்சொல்ல இந்தியர்களை மாதநிவேதனத்திற் கமர்த்தி வாழ்ந்தனரென்று வாசிப்போமாயின் அது எந்நாட்டினரைக்குறிக்கும்? அக்காலத்து யவன கிரேக்க தேசத்தினரோடும் எகிப்தியரோடும் வியாபாரம் செய்தார் தென்னாட்டினரன்றோ? இங்ஙனமாயின், தென்னாட்டினர் சோதிடம் சொல்லவல்லுனர் என்பதற்குப் புறச்சான்று இஃதொன்றன்றோ?

பன்னூற்றுண்டுகட்குமுன்னரிருந்த வராகமிஹிரர் என்னும் வித்வான் திரட்டிய பஞ்சசித்தாந்திகா என்னும் நூலை அச்சிடும்போது டாக்டர் தீபோ(Dr Thibaut) தாமெழுதிய முகவுரையில் "வாரன்(Warren) ஆசிரியர் சொல்லுகிறபடி சந்திர சூரியர்களுடைய ரேகாம்சங்களைக் கண்டுபிடிப்பதற்குத் தமிழ்ப்பாஷையைப் பேசும் தென்னாட்டார் ஸௌர அல்லது வாக்கியம் என்னும் விதியை அனுசரிக்கின்றனர். "அதன் பிரயோஜனம் என்னவெனில் மத்தியஸ்புடங்களைக் கண்டுபிடித்துப் பின்னர் வாக்கியப்பிழை தீர்த்துச் சுத்தஸ்புடத்தைக் கண்டுபிடிக்கும் வகையை விட்டு நேரே அவைகளின் சுத்தஸ்புடத்தைக் கண்டுபிடித்தலாம்." என்று எழுதுகிறார். டாக்டர் தீபோ இந்நாட்டுக்கு வெகுகாலங்களின்முன்னர் வந்து பலபல வேலைகளிலிருந்து கடைசியிற் கல்கத்தா சர்வகலாசங்கத்தின் காரியதரிசியாயிருந்தவர். (Registrar Calcatta University). பலபாஷாவிற்பன்னரும் மெய்மைபொருந்திய வானசாஸ்திரியுமான அவரே தென்னாட்டில் தமிழர்கள் வழங்கும் வாக்கியநிருபணம் சிலாகிக்கத் தகுந்ததென்றால் தமிழ்பேசும் ஜனங்களுக்குத் தனிப்பட நூல்களிருந்திருக்கவேண்டுமென்றாகிற தல்லவா. தமிழ்நூல்களில் துருவிப் பார்க்குமுன் ஆரியர் முதலிய கலைவல்லுநர் நூல்களில் தமிழர்களது சோதிடநூலைப்பற்றி ஏதாவது குறிப்பிருக்கின்றதா என்று ஆராய்வோம். அவ் வராகமிஹிரர் தாம் தொகுத்த பஞ்சசித்தாந்திகா என்னும் தொகை நூலில் பௌலிசசித்தாந்தம் என்ற நூலொன்றை அநேக இடங்களிற் குறித்திருக்கின்றனர். அவற்றுள் ஒன்றிரண்டு காட்டுதும்.

"த்ரிம்ஸாஷ்டா நவாப்ஸ ஷிவஸா ஷிதாம்ஸவ நவஜக்ஞாஃ।
'பௌலிஸ உதே சுபிநோஸ்வஸ்த்ர ஷிதாஷி நா ஜ்ஞவஃ ஸம்கேஷ்வஃ ॥"

"இதி பௌலிஸ ஸித்தாந்தஃ ॥"

"இதி பௌலிஸஸித்தாந்தே தாரஹ்ரஹா நாஷாதிஸொத்யாயஃ।"

ஆகவே, இத்தென்னாட்டாருக்குப் புலிசனால் (பௌலிசன் என்பது புலிசனென்பதன் திரிபுபோலும்) இயற்றப்பட்ட ஒரு வானசாத்திர நூல் இருந்ததென்று தெரிகிறது. மேலேகண்டவைகளினாற் சென்றகாலத்தும், இப்பொழுதும், இனியும் தென்னாட்டில் வழக்குடையது வாக்கிய சித்தாந்தமாகிய புலிசசித்தாந்தமேயாம் என்பது நன்குபுலப்படும்.

தமிழர்களால்மட்டுமன்றித் தெலுங்கர்களாலும் இவ்வாக்கிய சித்தாந்தமே உபயோகப்படுத்தப்படுகின்றதென்று டாக்டர்தீபோ கூறுவாரானால் இதற்குமேல் வேறு எடுத்துக்காட்டும் வேண்டுமோ.

*[இனி இப்புலீச சித்தாந்தத்தைப்பற்றி டாக்டர் தீபோவின் அபிப்பிராயமென்னவெனில், "புலீசசித்தாந்தத்தினுடைய கொள்கைகளென்னவென்று நாம் கவனிக்கப்புகுவோமாயின், யவனபுரத்துக்கும் உச்சயினி, காசி இவைகளுக்குமுள்ள ரேகாம்ச வித்யாசம் இன்னதென்று குறிப்பிடும் வியப்பினால் யவனபுரம் என்பது (தற்போதைய) அலெக்ஸாந்திரியாதான் எனக் கொள்ளுதலாம். பின்னும் தூர அளவுதெரிந்த இரண்டுபட்டினங்களின் ரேகாம்சம் தெரிந்துகொள்ளுதல். அதே அதிகாரத்தில் அயனங்கள் பூர்வத்தில் இன்ன நக்ஷத்திரத்தில் இருந்தனவென்ற பெருஞ்சொல். இன்னும் பௌலிசசித்தாந்தவிஷயமாகப் பேசும்போது நாலாவது அத்யாயத்திற் கொடுக்கப்பட்ட துருவவாக்கியங்களையும் கூறலாம். வராகமிஹிரர் எதினின்றும் தொகுத்தாரென்று சொல்வதற்கில்லை.] அது, மூன்று சித்தாந்தங்களுக்குப் பொதுவாயிருக்கலாம்; எங்கெல்லாம் வேண்டியிருக்கிறதோ அங்கெல்லாம் இந்தத் துருவங்களை வராகமிஹிரர் உபயோகித்திருக்கின்றனர். இந்த சாவாய்பாட்டின் பெரும்யோக்கியதாம்சம் என்னவெனில் இதனில் ஆரம் (Radius) 120 பாகங்களாகப் பிரிக்கப்பட்டு அவைகள் பின்னரும் 60 பங்காகப் பிரிக்கப்பட்டிருப்பதேயாம். வழக்கம்போல இந்தியமுறையாக 3438 கலைகளாகப் பிரிக்கப்படவில்லை. இது கிரேக்கமுறைப்படி 60 ஆகப் பிரிக்கப்படாமல் 120 ஆகப் பிரிக்கப்பட்டாலும் கிரேக்க முறையையொத்த சாபலன்களைக் (Sirres) கொடுக்கிறது. அநேக இடங்களில் டாலமியின் சித்தாந்தப்படிக்குள்ள சாபலன்களை ஒத்திருக்கிறதாயினும் சிலவிடங்களில் முற்றும் மாறாகவிருக்கிறது. (நமது) ஸம்ஸ்கிருத மூலபாடம் அநேக இடங்களிற் பூர்த்திசெய்யப்படவேண்டியிருப்பதால், பூர்த்திப் பிரதிகிடைக்குமானால் டாலமியின்கணக்குக்கு ஒத்துவருமென்பதிற் றடையேயில்லை.

---

*இருதலைப்பகரத்துட் காட்டப்பட்ட வாக்கியங்கள் இப்பொருளுரையுடையார் எழுதியபடியே பதிக்கப்பட்டன. அவை தெளிவாய் மொழிபெயர்க்கப்படவில்லையென்று தெரிகிறது. பத்திராதிபர்.

"முடிவாக, இவ்வராகமிஹிராற் கொடுக்கப்பட்ட புலிசசித்தாந் தத்தை இன்னும் வேறுபலரால் எடுத்தாளப்பட்டிருக்கும் புலிசசித்தாந் தத்தோடு ஒப்பிட்டுப்பார்க்கவேண்டியிருக்கிறது. வராஹமிஹிரரது பிருகத்சம்ஹிதைக்குப் பட்டோத்பலர் எழுதிய பேருரையிலும், பிரும்மகுப்தரது ஸ்புடபிரும்ம சித்தாந்தத்துக்குப் பிரதூதசுவாமி எழுதிய பேருரைகளிலும் புலிசசித்நாந்தமேற்கோள்கள் காணப்படுகின்றன. அவைகளிலிருந்த முக்கிய பாகங்களைக் கோல்புருக் ஆசிரியர் தமது வியாசங்களின் இரண்டாம்பாகத்தில் தொகுத்திருக்கின்றார். அவைகளிலிருந்து புலிசசித்தாந்திக்கு ஒருவருடத்துக்கு 365 நாள் 6 மணி 12 நிமிஷம் 36 செகண்டு என்று தெரிகிறது. நமக்குக்கிடைத்த பழமையான அபூர்த்தியான ஏடுகளிலிருந்து தெரிந்துகொண்டதில் வராகமிஹிரர்பார்த்துத் தொகுத்த புலிசம் வேறு;பட்டோத்பலர் கண்ட புலிசம் வேறு என்று விளக்குகிறது. அகர்கணத்தைக் கண்டுபிடிப்பதிலும் கிரகஸ்புடங்களிலும் அது தனக்குமாத்திரம் சுதந்திரமானதோரு வழியையனுசரிக்கிறதேன்று முன்னரே கூறியுள்ளேன். அதன்படி ஒருவருஷத்தின் அளவு 365 நாள் 6-மணி 12 நிமிஷம்தான். பஞ்சசித்தாந்திகாவின் கடைசி அத்யாயத்திற் குறிக்கப்பட்ட கிரகஸ்புடகணன விதிகள் புலிசசித்தாந்தப்படியாகுமாயின்-இதிற் சந்தேகமில்லை. இரண்டு புலிசமும் வேறு வேறு வழியுடையனவாகும். காலக்கிரமத்திற் புலிச சித்தாந்தமும் பல மாறுதல்களையடைந்தது. பட்டோத்பலர்கண்ட புலிசத்திற்கும் வராகமிஹிரர்கண்டதற்கும் வெகுவித்தியாசங்களிருந்தும் பின்னதையும் புலிசமென்று கூறுவதும் ஆச்சரியமேயாம்."

இவ்வாறு ஒரு மேனாட்டுப்பண்டிதர் எழுதுவாரானால், தென்னாட்டில் தொன்றுதொட்டு ஒரேசித்தாந்தந்தான் வழங்கிவருகிறதென்பதில் ஐயமேயில்லை. அப்படிவழங்கிவருவது நாமெல்லாரும் கையாண்டு வரும் வாக்கிய சித்தாந்தமே. இது புலிசனால் இயற்றப்பட்டதென்று அறியக்கிடக்கின்றதேயன்றி நூன்முழுவதும் அகப்படாமையால் அதன்பெருமைகளை விரித்துரைப்பது தற்போது சாத்தியமற்றதாகின்றது.

இனி, தமிழர் நட்சத்திரங்கள், கிரஹங்கள் முதலியவைகளுக்கு ஸம்ஸ்கிருதப்பெயர்களை உபயோகப்படுத்தினார்களா அல்லது சுத்தத் தமிழ் மொழிகளையே உபயோகித்துவந்தனரா என்று பார்ப்போமாயின்,

தமிழ்மொழிகளையே உபயோகப்படுத்தியிருக்கின்றனர் என்பது விளங்கும். ஒவ்வொன்றிற்கும் ஒரு பெயரேயன்றிப் பலபெயர்களையுமிட்டு வழங்கி யிருக்கின்றனர்; அவை வருமாறு:—

புகலுறுப்பரிமாவாசிபுரவியேதுரகஞ்சென்னி
இகலுறுகுதிரைமுந்நாளிரலையைப்பசியின்போ
மகலியதாழிபூதமடுப்பொடுதாராசுகங்குல்
பகல்வருகிழவன்சோறுபரணியின்பெயரதாமே.

ஆரலேயழலேயங்கியளகிறலறுமீனவி
சீர்கொள்கார்த்திகைப்போகுந்தேருருளயனுள்வையம்
பார்சகடுரோகணிப்பேர்பாவுமான்றலைஐந்தானம்
மார்கழிமதிபோளன்நரிப்புறம்ம்ருகசிரப்பேர்.

பேரிறைசெங்கையாழ்வில்லாதிரைப்பெயராம்பிண்டி
கார்திரள்மூங்கில்மாலைகரும்பொடாவணமேவிண்டல்
கூரியபுநர்தமாகுங்குடந்தராகொடிறுதையம்
பார்மதிபூசப்பேராம்பணிகவ்வைபாம்பாயில்யம்.

பாவுமுற்சனியேவாய்க்கால்வேட்டுவனெழிலிபாரிற்
கூவியனுமவிமாசிகொடுநுகமகப்பேர்தூற்கை
நாவிதனெலியேமற்றையிடைச்சனிபூரமும
மோவில்பாற்குனிபங்கூனிகடைச்சனியுத்திரப்பேர்.

உத்தமன்களிறுநவ்வியுயர்கவுத்துவமாங்கைம்மீன்
அத்தமென்கன்னியாடையம்பரம்பயறுகொய்மீன்
சித்திரைப்பெயர்மாக்கால்பதுமமேதீபஞ்சோதி
மொய்த்தவைகாசிமுற்றில்சுளகுடன்முறம்விசாகம்.

விசைகொள்புற்றுளிபுன்றேள்மெய்ப்பனையனுடப்போ
மசைவில்வல்லாரைவாளிதுளங்கொளிகேட்டையாகுங்
திசையுறுதுருகுகொக்குத்தேட்கடையானிமூலம்
வசையிலாக்குளமேபோய்கைவாவிபூராடமாமெ.

மானெனிற்குளமேகூவல்மணிமுடியாடையூர்தி
கானவுத்திராடஞ்சோணைசிரவணமுலக்கையோண
மானபுட்பறவைகாக்கையாவணியவிட்டப்போங்
தேனனுய்சுண்டன்குண்டில்செக்கிவைசதயஞ்செவ்வே,

செவ்வியகோடுங்கோல்நாழிபுரட்டைசேர்பூரட்டாதி
யவ்வியமூரசுவேந்தனறிவனுத்திரட்டாதிப்பேர்
வவ்வியகடைமீன்தோணிமரக்கலந்தாலம்நாவாய்
ஙவ்வியேரேவதிப்பேரவைதினநாட்பொதுப்பேர்.

இராசிகளுக்குள், மேடத்திற்கு மறி, தகர், மேழகம், கொச்சை என்றும், இடபத்திற்கு விடை, புல்லம், சே, எருது என்றும், மிதுனத்துக்கு வீணை, தண்டு, யாழ், தாரம், என்றும், கடகத்துக்கு நண்டு, அலவன், நள்ளி, குளிர், என்றும், சிங்கத்துக்கு ஆள், அரி, கோண்மா, கடுவன் என்றும், கன்னிக்கு மாது, தையல் என்றும், துலாத்துக்கு நிறைகோல், தூங்கல், கட்டளை என்றும், விருச்சிகத்துக்கு விட்டன், துட்டன், தேள் என்றும், தனுசுக்கு வில், சிலை, கார்முகம் என்றும், மகரத்துக்கு மான், கலை, சுறு என்றும், கும்பத்துக்குக் குடம், குட்டுவம் என்றும், மீனத்துக்கு மீன், கயல், சேல் என்றும், பெயராம்.

ஆகவே தமிழ்நாட்டார் தங்களுக்கெனத் தனிப்பட்ட வானகணித நூலொன்றையும் அதனாலுண்டாகும் பயனையறிவிக்கும் நூலொன்றையும், உடையவர்களாயிருந்தனரென யாதொருதடையுமின்றிக் கூறலாம்.

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர்—சோமசுந்தரதேசிகன்.

---

௨

## சிறைவிடந்தாதி.

(௩0௬-ஆம் பக்கத் தொடர்ச்சி.)



முத்திநெறிகண்டருதபத்தினிரங்கிமூடிமுட்காமகன்றுதூயதோர்
சத்தியையடைந்துயோகசிற்பரனினைந்துநீர்தொழற்குரியசெந்தின்மேவிலீர்
மத்தமதந்திமாமுகற்கிளையதம்பியோர்மயிற்கடவுடர்தாலுவே
தத்திறுசிரம்புசெயருட்பெறுவதென்றுநீர்சலப்படுவதென்றுதீருமே. (௮0)

வேறு

நீராதமம்மர்த்தினையாற்றியக்குண்டு
சோராக்கவலுழன்றமுங்கீர்த்தரும்பானே
னோரார்பாக்குன்றுவந்தாயிரங்காயோ
பேரார்களிபாவஞ்செந்தூர்ப்பெருமானே. (௮௧)

மானங்குலங்கல்விமேன்மைவடிவிருந்துந்
தானமிவைதுறந்துநிற்கத்தகுவேனே
மீனந்தருஞ்சாலிவேலிப்பரப்புமலர்த்
தேனுந்தழையுந்திருவேரகத்தானே. (௮௨)

ஆனாத்தெருமலன்குற்றல்லற்படுவேற்குன்
றேனார்கருணைச்சிறப்பளிப்பதெந்நாளோ
வானோர்முறைபரவநின்றமலைகிழவோய்
தூனாறும்வேற்படையாயாறிரண்டுதோளானே. (௮௩)

தோளாறிரண்டுஞ்சுரக்கும்பெருங்கருணை
மூளாதுதிங்கண்முகமுந்தொழற்கருள்வாய்
வாளாமறையாவினன்குடிவாய்நின்றமலர்த்
தாளாமுருகாதனிவேற்படையோனே. (௮௪)

படைப்பானுங்காப்பானும்பல்லுயிருமெல்லாந்
துடைப்பானுநீயாகித்தோன்றினையேதோன்றால்
கொடைக்கார்முகிலணவுங்குன்றுதொறுநின்றோய்
விடைப்பாகனன்றளித்தமெய்த்தவத்துமெய்யே. (௮௫)

மெய்யேயுபநிடமேமெய்த்தவமேவேண்டார்க்குப்
பொய்யேயுயிரனைத்துநீங்காப்பொதுமயமே
வையேறுவெள்வேற்படையாய்வளையூர்ந்து
செய்யேறுசெந்திலாய்தாராய்திருநோக்கே. (௮௬)

நோக்கமுநின்பொன்னடிக்கீழல்லாதுநோக்காது
வாக்குமுனையன்றிவழுத்துமோமான்மருகா
தேக்குகடல்சுவறச்செவ்வேற்படைவிடுத்த
கோக்களிறேசெந்திற்குமராவிரங்காயே. (௮௭)

காயுங்கனல்வாய்மெழுகிற்கனிந்துருகித்
தீயுந்தனிநெஞ்சனேன்பாற்சிறிதிரங்காய்
பேயுங்கழுகும்பிணங்கப்பெருஞ்சூர்மேற்
பாயுஞ்சுடரிலைவேற்செந்திற்பதியானே. (௮௮)

செந்திற்கரசேசிவசிற்பரக்கொழுந்தே
முந்தப்பழமறைக்குமெட்டாமுருகோனே
வந்திப்பவர்க்கிரங்கும்வாழ்வேவடிவேலோய்
பந்தத்தளையறுத்தாட்கொள்ளும்படிக்கருளே. (௮௯)

கொள்ளாப்பெருந்துயரமுன்னைவிதிகூட்டத்
தன்னாடிநிற்குந்தமியேற்கிரங்குவதார்
முன்னாடுசேவற்கொடியாய்முருகாவெ
னுன்னாருனையன்றியுண்டோவுரையாயே. (௧௦)

வேறு.

உரையுணர்வொழிந்ததனிமுதற்பொருளாயுயர்பெரும்பதங்களுங்கடந்தாய்
பிரையுறுபாலுநெய்யுமொத்தொடுங்கிப்பெருநிலப்பரப்பெலாங்கரந்தாய்
தரைமுதலாயபூதமைந்தாகித்தனித்தனிக்கடவுளுமானு
யானருள்குமராவரிதிருமருகாவறுமுகாவபயநின்னபயம். (௧௧)

பயநெடும்புணரியடலரவமளிப்பங்கயமனையெனத்துயின்று
யயனெனவுலகமுழுதுறப்படைப்புற்றம்புயப்பொகுட்டினிலமர்ந்தாய்
கயிலையங்கிரியிலொருதனிப்பொருளாய்க்கடவுளருவப்பவீற்றிருந்தாய்
புயிறுநெருமிச்சினகரச்செந்திற்புரவலாவபயநின்னபயம். (௧௨)

நின்னிலைதெரிந்தவமுத்தியாதரித்துநினைதற்குநினைவினுக்கெட்டாத்
தொன்னிலையாகியளவில்பல்கோடியண்டங்கள்யாவையுந்தொகுத்துத்
தன்னிலையாதிமேருவாயுலகந்தாங்குதியறுமுகப்பெருமான் :
முன்னிலையாவர்தனிபகுத்தறிவார்முருகனேயபயநின்னபயம். (௧௩)

முருகலர்முளரியந்தணனறியாமுழுமுதற்பிரணவத்தமர்ந்தாய்
கருமகாரியமுங்கருத்தனுமாகிக்காண்பனயாவையுமாகி
யொருவுதியொருவனுண்டெனிலுண்டேயூட்டுவானுகியநெடுமான்
மருகனேகுமராவள்ளிநாயகனேவரதனேயபயநின்னபயம். (௧௪)

வாந்தருகடவுளாறெனப்பகுத்துச்சமயங்களாறெனமருவிப்
பாந்தருபடைநூலாறெனத்தோன்றிநான்மறைப்பகுதியிற்பரந்து
புரந்தரன்முதலோரேத்துதற்கரியபொருளெனநின்றனைபுலவா
காந்தனேகுமராவள்ளிநாயகனேகடவுளேயபயநின்னபயம். (௧௫)

கடவுளோர்மூன்றுந்தொழிலொருமூன்றுங்குணங்களோர்மூன்றுமாய்க்கரந்து
சுடர்களோர்மூன்றும்பிறப்பினிலாண்பெணலியெனுந்தொன்மையுமாகி
யுடலுமாயுயிருமுயிரனுபவிக்குமிருவினைத்தொடர்ச்சியுமொத்தாய்
படைநெடுஞ்சுடர்வேற்குமரனேசெந்திற்பரமனேயபயநின்னபயம். (௧௬)

பரகதியுணர்ந்துபரிபுரநினதுபாதபங்கயம்பணிந்தறியே
னரிதிருமருகாமுருகவென்றேத்தியாதரித்தருள்பெறவேண்டேன்
திருவிலியெனதுதனிமைகண்டெனதுதிருவுளமிரங்கியாட்கொள்வா
யானருள்குமராசரவணபவனேயறுமுகாவபயநின்னபயம். (௧௭)

அந்தரமிடைபுக்கொருதுணையின்றியலமருமெனக்குநின்கருணை
தந்தருவினைதீர்த்தாண்டுகொண்டருளுந்தன்மையிற்சிறியவுமுளவோ
கந்தனேகுமராபன்னிருதடந்தோட்காளையேகாலவேற்படையாய்
செந்திலம்பதிவாழெந்தையேமுருகாசெல்வனேயபயநின்னபயம். (௯அ)

செல்வமுஞ்சிறப்புமனைவியுமகவுநிதியமுந்தீதிலாநலனுங்
கல்வியுங்கவினுமென்பதற்குனதுகருணையினன்றிமற்றுளவோ
வல்வினைச்சிறியேனறிந்தவாறுனதுமலரடிவழுத்துதற்கிரங்கிப்
புல்வினையறுத்தசெந்திலம்பதியாய்புரந்தருளபயநின்னபயம். (௯௯)

அத்தனேயபயமறுமுகாவபயமந்தரத்திமையவர்க்களித்த
முத்தனேயபயமுதல்வனேயபயமும்மயமொருமயமான
சித்தனேயபயஞ்சிற்பரானந்தத்தேசிகாவபயமெவ்வுயிர்க்குங்
கத்தனேயபயம்பன்னிருதடந்தோட்காளையேயருள்பதப்பூவே. (க00)

சரவணபவன்முன்னிற்க.

பாண்டியன்சிறையிலகப்பட்டுக் கோனேரிப்புலவன் பாடிய
சிறைவிடந்தாதிமுற்றும்.
குமரநாயகன்பாதாரவிந்தமேகேதி.

சு. நல்லசிவன்பிள்ளை,

---

# சிறைவிடந்தாதி நூலாசிரியர்வரலாறு.

இந்நூல், இப்பத்திரிகையில் வெளியிடப் பெறுதற்கானகாரணம், இச் செந்தமிழ்த் தொகுதி 19 பகுதி 6 பக்கம் 212-ல் எழுதியிருக்கும் குறிப்பால் விளங்கும். அக்குறிப்பில், ஆசிரியர்வரலாறுமுதலியன தெரியவில்லையென்று குறித்திருந்ததைக்கண்ணுற்ற செந்தமிழ்ச்சந்தாதாரும், தமிழ்ப்புலவரபிமானியுமாகிய ஆரியூர் ஸ்ரீமத் ஆ. வ. பதுமநாபபிள்ளையவர்கள் தம்மிடமுள்ள புலவர்புராணம் இருவைணவர்சருக்கத்திற் சிறைவிடந்தாதி நூலாசிரியர்வரலாறு கூறப்பட்டிருக்கின்றதைத் தெரிவித்ததுடன், தம்மிடமுள்ள புலவர்புராணத்தையும் எனக் கனுப்பி வரலாற்றை வெளியிடுமாறு செய்தனர். இன்னோர்புரிந்த நன்றி யென்றும் மறக்கற்பாலதன்று.

இந்நூலை இப்பத்திரிகைவாயிலாக வெளியிடுதற்குமுன், அவ்வேட்டுப்பிரதி யென்னிடமிருப்பதை ஞாபகமுறுத்தித் தாம் அந்தாதி கலம்பகம், கோவைமுதலிய பன்னூல்களினின்றும் செய்யுள்களைத் தேர்ந்தெடுத்து, அச்சிட்டுவரும், செய்யுட்பாடக்கோவை யென்னும் தொகைநூலில், சிறைவிடந்தாதிச் செய்யுட்களிலும் சில சேர்க்கப்படிற் சிறப்புடைத்தாமெனக் கருதி வாங்கிச் சேர்த்தவர், எனதுநண்பரும் இச்சங்கத்தங்கத்தினரும், சௌராஷ்டிர உயர்தரகலாசாலைத் தலைமைத்தமிழாசிரியருமாகிய ஸ்ரீ. பு. சிதம்பர புன்னைவனநாதமுதலியாராவர். இவர் அப்பொழுது ஆசிரியர்வரலாறு விளங்காமையின் அவ்வேட்டுப்பிரதியிற் கண்டவாறே தந்நூலினுங் குறிக்கலாயினர். ஆரியூர்ப்பிள்ளையவர்கள் எடுத்துக்காட்டிய இவ்வரலாறு, செய்யுட்கருத்துக்களை உரைநடையிலெழுதியும், பிறமொழியிலுள்ள அருநூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தும் தமிழ்மக்கட்கனுகூலமாகத் தமிழ்ப்பத்திரிகைகளைப் பதிப்பித்தும் தமிழில் உரைநடைநூலைப் பெருக்கிவருகின்ற முதலியாரவர்கள் எழுதிவரும் ஆசிரியர்வரலாற்றுநூலுக் குறுதுணையாமெனக்கருதுகின்றேன். இனிப் புலவர்புராணத்திற்கண்ட சிறைவிடந்தாதிநூலாசிரியர் சரித்திரம் வருமாறு:—

பாண்டியநாட்டிலே தாமிரபரணிநதிதீரத்தையடுத்த திருக்குருகூரென்னுந் திருப்பெயர்வாய்ந்த ஆழ்வார்திருநகரியில் அந்தணர் குலதிலகராய்ச் சதுர்வேதபாரங்கதராய்ப் பாகவதசிரேட்டராய், ஆதிநாராயணமூர்த்தியையேயன்றி யப்பெருமானவதாரமான ஸ்ரீராம கிருஷ்ணாதிதேவர்களையும் பொருட்படுத்தாதவராகிய வீரவைணவ ரொருவ ரிருந்தனர். தெய்வத்தமிழ்ப் புலவராகிய நக்கீரர் பொய்யாமொழி முதலிய புலவர்வாய்க்கவிவேட்ட முருகப்பெருமான் அவ்வைணவர் கனவிற் செந்தூரிலுள்ள, ஓரந்தணராகத்தோன்றி எம்மூர்க்குகன்மீது பாடுக என்று திருவாய்மலர்ந்தருளினர். கனவுகண்டுவிழித்தவைணவர் மறுநாட்காலையில், தமது வழிபடுகடவுளாகிய அவ்வூர் ஆதிநாராயணமூர்த்தியின் ஆலயஞ்சென்று அக்கடவுளைவணங்கி மலையுறைவேடுவர்வணங்குகின்ற குறுந்தேவும் இங்கென்னை யாட்கொள்ளக்குறித்தது யாதுகாரணமென்று கவன்று பெருந்துயருற்றனர். அன்றிரவு அவர் துயிலுகையில் அவ்வாதிநாராயணர் ஒருகரத்தில் வேற்படையும் மற்றொருகரத்திற் சக்கரப்படையுந் தாங்கிய திருக்கோலத்துடன் அவர்கனவிற்றோன்றிச்

செந்தூர்ப்பெருமான்மீது பாடுகவென்று கட்டளையிட்டுச்சென்றனர். அது கேட்டுப் பின்னுங்கவன்று அப்பெருமான்சந்நிதியிற் றுயிலுகையில் அன்று மவர்கனவிற்றோன்றி எல்லாத்தேவரு மெனதமிசமேயாவர்; அன்றியும், கந்தவேள் அமிசமுழுவதும் எனதமிசமேயென்று கற்றோர் பலருங் கூறுநிற்பர். ஆதலின் நினதாணவத்தையொழித்திடுகவென்று கூறிச்சென்றனர். இவ்வாறு கூறியும் ஒருப்படாது நமதுதெய்வ மிறந்துபட்டது; இங்குற்றது மயிலூர்தெய்வமேயாம். இனி நாமிறந்துபடுவதே நலமெனக்கருதி யவ்வாறுபுரியத் துணிந்திருக்கையில் அக்காலத்துத் தென்பாண்டிநாட்டை யரசுபுரிந்துவந்த வேளாண்குலதிலகராகிய வடமலையப்பபிள்ளையென்பார் தற்செயலா யவ்வூர்க்குவந்துற்றனர். அன்று அவர்கனவிற் குன்றமெறிந்தகுழகன்றோன்றி அவ்வந்தணர்வரலாற்றைத்துங்கூறி யவரிறவாவண்ணம் வெள்ளிவிலங்குசெய்வித்தணிந்து காத்தியென்று கூற அவ்வாறே நூற்றுநாற்பது பலநிறையுள்ள இரசிதத்தினால் விலங்குசமைத்து வைத்துக்கொண்டு, அவ்வேதியரையழைத்து உபசரித்து இஃது முருகப்பிரா னுமக்களித்ததென்றுகூறி அவர்க்கணிவித்துச் சிறைசெய்தனர். பின்னர்ச் சிலநாளாகச் சிறைத்துயருற்ற அந்தணர் ஒருவாறுதேறித் திருமாலுஞ் சொற்றனரேயென்று தெளிந்து அக்குகப்பெருமான்மீது பதிற்றுப்பத்தந்தாதியென்னு மோரந்தாதி பாடலுற்றனர். அங்ஙனம் பாடுகையில் ஒருபது பாட்டினுள் தனது தளையைக் கொய்தருளல்வேண்டுமென்றுபாடியவளவில் அவ்விலங்கு படீரெனத் தெரிக்கலுற்றது.

"ஒருபதுபாட்டாவதன்முன்னொருகவியிற்செய்வதொன்றுமுணரேன்வைவேன்
முருகவென்றன்வன்றளைகொய்தாண்டருளவேண்டுமெனமொழிந்தானப்போ
தருகிருப்பார்நடுங்குறப்படீரெனவேயிரட்டொலியிட்டதுவேறாயிற்
றுருமதனேர்வடமலையப்பன்கனவிற்செவ்வேள்சென்றுரைக்கலுற்றான்"

என்று முருகதாச சுவாமிகள் கூறியிருப்பது,

"செய்வதொன் றறிகிலேன் செழுமென் போதுதாட்
பெய்வதொன் றறிகிலேன் பேதை யேன்சுடர்
வைதிகழ் வேற்படை முருக வன்றளை
கொய்தெனக் கிரங்கியாட் கொள்ள வேண்மோல்"

என்ற சிறைவிடந்தாதி எட்டாவதுசெய்யுளால் வலியுறுகின்றது. பின்பு அச்செய்தியைச் சூர்கிளைதடிந்த சூரபிற்பெருமான் வடமலையப்ப

பிள்ளையின்கனவிற்றோன்றி யருளியதுடன், அவ்வேதியர்பாடிய பாடல்களை நமதுசெந்திநி லரங்கேற்றச்செய்து யாவருமதிசயிக்கத்தக்க பரிசிலுங்கொடுத்திடுக எனவுங் கூறிச்சென்றனர். அங்ஙனமே, வடமலையப்பபிள்ளை அப்பெருமான்கட்டளையைச் சிரமேற்கொண்டு அவ்வந்தாதியைச் செந்தூரி லரங்கேற்றுவித்து அதற்குச் சிறைவிடந்தாதியெனப் பெயருங்கொடுத்து அவர்க்குவேண்டிய பரிசிலுங் கொடுத்தனரென்பது புலவர்புராணத்திற்கண்டது.

"முன்குறித்த தினத்தின்மன்னன் செயத்தகுமா டம்பரங்கண் முழுதுஞ்செய்து, வன்குணத்தோ ரையுந்தடுத்தாள் குகன்றனெதிர் கவி முழுதும் வாசித் தாய, பின்குறித்த பனுவலுக்குச் சிறைவிடந்தா தியெனுமொரு பெயருஞ் சூட்டிப், பொன்குவையு மணிப்பணியும் புரவி முத லியவுமந்தப் புலவற் கீந்தான்"

'அப்புலவன்பெயராருமறைந்திலர்யாணுந்துணிந்தோன்றமைக்கவில்லை'

என்னும் மேற்கண்டவிவரங்களால் அச்சிறைவிடந்தாதி யிதுவே யென்பதும் இந்நூலாசிரியர் அவ்வைணவரே யென்பதும், அவர்பெயர் தெரிதற்கில்லை என்பதும் விளங்குகின்றன.

சு. நல்லசிவன்பிள்ளை.

---

# அகஸ்தியர்.

சென்ற ஆனிப்பகுதியில் அகஸ்தியர் என்னும் விண்மீனைப்பற்றி எழுதியிருந்தேனல்லவா? பின்னர் ஆராய்ச்சியில் இதற்கு ஆங்கிலத்தில் காநோபியஸ் (Canopius) என்று பெயரென்றும், இது உத்தரகோள மண்டலத்திற் றெரியாதென்றும், தக்ஷிணகோள மண்டலப்பகுதியைச் சேர்ந்ததென்றும், இது வெறுங்கண்ணுக்குத் தோற்று மொரு நாண்மீனென்றும், ஜூன்மாதத்திற்குப்பிறகு தோற்றுதென்றும் ஐரோப்பிய வான சாத்திர நூல்களிற் காணப்படுகிறது. இங்கிலாந்திலுள்ள "கிரீன்உவிச் அப்ஸர்வேட்டரி" என்னும் வானசாத்திரச்சாலையினின்று வெளியிடப்

பெறும் நாட்டிகல் அல்மனக் (Nautical Almanac) என்னும் கணித நூலில் இதற்கு ஆல்பா ஆர்கஸ் (Alpha Argus) என்று பெயரென்றும் இதனது தினகதி 009 விகலையென்றும் அறியப்படுகிறது. பரிபாடலிற் காணப்பட்டபடி இது வக்ரகதியுடையதென்று காணப்படுகிறது.

வாக்கியபஞ்சாங்கத்திலே வைகாசிமீ 27,28உ களில் இதன் அஸ்தமனம் காணப்படுகிறது. இது சுமார் ஒரு 20 வருடங்களாக அவ்விதமே பதிக்கப்பட்டிருந்தாலும் அஸ்தமனகாலமாத்திரம் வித்தியாசப்பட்டுவருகிறது. வாக்கியகணிதத்தில் நிபுணரான சாமாசாஸ்திரிகள் ஸமீபத்திற் காலஞ்சென்றனரெனக் கேட்க மிக வருத்தமாயிருக்கின்றது. புலீசசித்தாந்தத்திலே

𑌵𑌿𑌷𑍁𑌵𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌰𑍍𑌧𑌗𑍁𑌣𑌾 𑌪𑌞𑍍𑌚𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌜𑍀𑌵𑌾 𑌤𑌸𑍍𑌯 𑌤𑌚𑍍𑌚𑌾𑌪𑌮𑍍 ।
𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 𑌦𑌶𑌗𑍁𑌣𑌿𑌤𑌂 𑌵𑌿𑌨𑌾𑌡𑍍𑌯𑌸𑍍𑌤𑌾𑌃 ॥ (1)

𑌤𑌾𑌭𑌿𑌃 𑌕𑌰𑍍𑌕𑌟𑌾𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌤𑌾𑌵𑌤𑍍 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌂𑌶𑌾 ।
𑌯𑌾𑌂𑌯𑌾𑌶𑌾𑌵𑌨𑌿𑌤𑌾𑌯𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌿𑌤𑌕𑍋𑌣𑌾 𑌨𑌿𑌰𑌗𑌚𑍍𑌛𑍇𑌤𑍍 ॥ (2)

𑌗𑌣𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑍋 𑌵𑌿𑌷𑍁𑌵𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌤𑌾𑌂 𑌯𑌾𑌤𑌿 । (3)

இவற்றின் பொருள்:—இருபத்தைந்தை விஷுவச்சாயையின் பாதியாற்பெருக்கி அதற்குநேராயுள்ள வட்டத்தைக் கண்டுபிடித்து, அதனோடு 15 கூட்டுக; கூட்டிப் பத்தாற்பெருக்கி அதனுடன் விஷுவச்சாயையின் 21 மடங்கைக் கூட்டுக; இது விநாடியாம்.

மேற்கூறியவிநாடியாற் கடகமுதற்கொண்டு சூரியனிற்குமிடத்தைக் கண்டுபிடிக்கக் கணக்கின்படி தயாரிக்கப்பட்ட கருவிகளைக்கொண்டு சோதிப்போமாயின் அங்கே அகஸ்திய மகரிஷி புலப்படுகின்றார்.

இக்குறிப்புக்களையும் பண்டிதர்கள் கவனிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இலக்கணவிளக்கப்பரம்பரை,

திருவாரூர்—சோமசுந்தரதேசிகன்.

திருவாரூர்—சோமசுந்தரதேசிகன்.

ஸ்ரீ

# விவாக ரகஸியம்.

(௩0௨-ம் பக்கத் தொடர்ச்சி.)

கா:–மணமகனும் மணமகளும் இரதத்தில் ஏறியதாகவன்றோ கூறினாய்.

ச:– ஆம். இரதத்தைச் செலுத்துமுன் மணமகன் சக்கரங்கள் செல்லும் இரண்டுதடத்திலும், ஒன்றில் நீலநூலையும் மற்றொன்றிற் சிவப்பு நூலையும் போடவேண்டும்.

கா:–இது எதற்காக?

ச:– பிறருடைய திருஷ்டி அல்லது அவர்களால் ஏவப்பட்ட சூன்ய தேவதைமுதலியவற்றாலுண்டாகுந் தோஷத்தைநிவர்த்திக்க இவ்வாறு செய்யவேண்டும்.

கா:–தோழீ! சூன்யதேவதையென்றாலென்ன? புலப்படவில்லையே?

ச:– இது, தங்கள் எதிரிகளைவருத்துவதற்காகச் சிலராற் சிலசடங்குகள்செய்து அனுப்பப்படும்தேவதை. இது சடங்குமுதலியசெய்து தன்னை உபாசித்து வருவித்தவர்களின் மனத்துக்கிசைந்து பிறரை வருத்தத்தலைப்படும்.

கா:–இதைப் புதிய வைஞானிகள் (Scientist) நம்புகிறதில்லை.

ச:– அதனாலென்ன? நம்தேசத்தவர்களெல்லாருக்கும் இந்த விஷயம் பெரும்பாலும் அனுபவத்தில் வந்திருக்கிறது.

கா:–மெய்தான். இராமாயணத்திலுள்ள நிகும்பலை விருத்தாந்தம் எல்லாருக்கும் தெரிந்ததுதானே. மேல்நடப்பதென்ன?

ச:– விரிக்கப்பட்ட நூலின்மேல் மணமகன் இரதத்தை நடத்திக்கொண்டு செல்லவேண்டும். செல்லும் வழியில் தீர்த்தங்கள், மஹாவிருக்ஷங்கள் நாற்சந்திகள் முதலியவை எதிர்ப்பட்டால் அவற்றில் ஸாந்நித்யம் செய்கிற தெய்வங்களின் பிரசாதத்தைவேண்டி அவ்வவற்றுக்கு ஏற்பட்ட மந்திரங்களை ஜெபிக்கவேண்டும்.

கா:–தெய்வங்களைநம்புகிற ஆஸ்திகர்கள் இவ்விதம் செய்வது நியாயந்தான்.

ச:– செல்லும்வழியில் நதியிற் பிரவாகமேற்பட்டு ஓடத்திலேறிப்போக நேர்ந்தால் மணமகன் அந்த ஓடத்தைத் தொட்டு மந்திரத்தை ஜெபித்து அக்நியுடனும் மணப்பெண்ணுடனும் ஓடத்தில் ஏறிக்கொள்ளவேண்டியது. ஓடம்நடத்தும்பொழுது மணமகள் ஓடக்காரர்களைப் பார்க்கக் கூடாது.

கா:–ஏன்கூடாது?

ச:– பெரியபிரவாகத்தில் ஓடக்காரர்கள் சாகஸமான காரியங்களைச் செய்ய நேரிடும். அதைப்பார்த்து மணமகள் பயத்தினால் மனங்கலங்கலாம். அப்படிக் கலங்குதல் அமங்கலத்தைக் குறிக்குமென்று சூத்திரக்காரர்கள் அபிப்பிராயப்பட்டிருக்கலாம்.

கா:–நானும் அப்படித்தான் நினைக்கிறேன்.

ச:– அவர்கள் ஏறிச்செல்லும் வாகனம் ஸ்மசானம் வழியாய்ப்போகும்படிநேர்ந்தாலும், அக்கினித்தாழி அல்லது இரதம் பழுதுபட்டாலும் முகாந்தம் (ஆரம்பஹோமம்) முதல் தொடங்கிப் பிராயச்சித்த ஆகுதிகளை ஹோமம் பண்ணி, ஜயாதிஹோமம்வரை செய்து முடித்து மறுபடியும் யாத்திரை தொடங்கவேண்டும். இரளி, ஆல் முதலிய மஹாவிருக்ஷங்களையும் பெரியவனங்களையுந் தாண்டிச்செல்லுகையில் மணமகன் மந்திரங்களை ஜெபிக்கவேண்டும்.

கா:–அப்புறம்.

ச:– பிறகு தன்வீடுபோய்ச்சேர்ந்து 'இது என்வீடு இவர்கள் என் உறவினர்' என்று மணமகளுக்குத் தெரியும்படி மணமகன் தெளிவாய் எடுத்துரைக்கவேண்டும்.

கா:–நியாயந்தான். இல்லாவிடில் நாயகனுடைய வீட்டையும் சுற்றத்தாரையும் மணமகள் எப்படித் தெரிந்துகொள்ளக்கூடும்.

ச:– பிறகு இரதத்திற்பூட்டிய இரண்டு குதிரைகளையும் மணமகன் தன்னுடையநன்றியறிவைக்குறிக்கும் மந்திரங்களைச்சொல்லி அவிழ்த்துவிடவேண்டும். பின்,வீட்டின்நடுவில்,சிவப்புநிறமுள்ள காளைமாட்டுத் தோலைக் கழுத்துப்புறம் கிழக்கும் மயிர்கள் மேலுமாக விரிக்கச் செய்து மணமகன் மணமகளுடன் வீட்டிற் பிரவேசிக்கவேண்டும். வீட்டிற்பிரவேசிக்கும்பொழுது மணமகன், மணமகளை இடைகழியிற் கணப்பொழுதும் தங்காமல் விரைவாய் நடத்தி உள்ளே அழைத்துக்கொண்டுசெல்லவேண்டும்.

கா:–ஏன் இந்த நிர்ப்பந்தம்? இடைகழியில் திருடனாவது இராக்கதனாவது இருப்பதாகத் தெரியவில்லையே?

ச:– நமதுதேசத்தில், புருஷர்களுக்காவது ஸ்திரீகளுக்காவது மரணம் சமீபித்தால் அவர்களை இடைகழியிற் கிடத்துவது வழக்கம்.

முதலிற் பிரவேசிக்கும்பொழுது அந்த இடத்திற்றங்கினல் மண மகளுக்கு ஒரு சமயம் அமங்களமான விஷயங்கள் ஞாபகத்துக்கு வரலாமாதலால் அப்படி நேரிடாமலிருப்பதற்கு மஹரிஷிகள் இந்த நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தியிருக்கலாமென்று ஊகிக்கிறேன்.

கா:—நன்றாயிருக்கிறது.

ச:— பிறகு வீட்டின் வடகிழக்குப்பக்கத்தில் அக்கியை மூட்டி ஹோமம் செய்து மணமகன் மணமகளுடன் மேற்கூறியபடி விரிக்கப்பட்ட தோலில் உட்காரவேண்டும். உட்கார்ந்ததும் பிள்ளைசாகக்கொடுக் காத ஒரு ஸ்திரீயின் ஆண்குழந்தையை மணப்பெண்ணின்மடியில் உட்காரவைத்து மந்திரஞ்சொல்லி அக்குழந்தைக்குப் பழங்களைக் கொடுத்து ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் உதிக்கும்வரை மணமகன் மௌனமாயிருக்கவேண்டும். நக்ஷத்திரங்கள் உதித்தபின்னர் மணப்பெண்ணைக் கிழக்கு அல்லது வடக்குமுகமாகக் கூட்டிக் கொண்டுபோய்த் துருவநக்ஷத்திரத்தையும் அருந்ததிநக்ஷத்திரத் தையும் காண்பிக்கவேண்டும்.

கா:—இந்த முறையினல் மணமகன் தனக்கு மணமகளிடத்து அக்கினியி னருளால் நல்ல சந்தானமுண்டாகி வம்சம் தழைத்திருக்கவேண்டு மென்று பிரார்த்திப்பதாகத் தெரிகிறது. துருவநக்ஷத்திரம் அருந்ததிநக்ஷத்திரம் இவைகளைக் காண்பிப்பதற்குக் காரணம் அறியக்கூடவில்லை.

ச:— முன்பொருகாலத்தில் கச்யபர் வஸிஷ்டர் முதலான ஏழு மஹரிஷி கள் இருந்தார்கள் என்றும், அவர்களுக்குக் கிருத்திகையென்று பெயருள்ள ஏழுமனைவியர் உண்டு என்றும், அவர்களில் அருந்ததி என்பவள் பதிவிரதைகளின்நிலையில்நின்றுவழுவாதவளாக இருந்தா ளென்றும், மற்றவர்கள் கற்புநிலையிலிருந்து வழுவியதால் விலக் கப்பட்டார்களென்றும் பௌராணிகர்கள் சொல்லுகிருர்கள். இதை யனுசரித்து நக்ஷத்திரங்களைக்காண்பிக்கும்பொழுது சொல்லப்படு கிற மந்திரங்களின்பொருளை ஆராயுங்கால், மணமகள் அருந்ததி போலவும், தான் வசிட்டன்போலவும் ஆகவேண்டுமென்று மணமகன் பிரார்த்திப்பதாகவிளங்குகிறது.

கா:—தோழீ! நக்ஷத்திரங்களெல்லாம் இவ்வுலகத்திற் புண்ணியஞ்செய் தவர்களுக்கு ஜென்மாந்தரங்களில் ஏற்படுகிற உருண்டை வடிவ மான புண்ணியலோகங்களாயிருக்கவேண்டுமென்று சொல்லுகிருர் களே. அப்படியிருக்க, அவைகளுக்கு ஆண்பால் பெண்பால் என்ற பகுப்பும் கற்புநிலைமுதலிய குணங்களும் உண்டென்று எப்படி நம்பலாம்?

ச:— அந்தந்த உலகங்களுக்குரிய தேவதைகளின் சொரூபங்களையும் குணங்களையுந்தான் மந்திரம் சொல்லுகிறதென்று அறியவேண்டும்.

கா:—பிருஹஸ்பதிநக்ஷத்திரத்திற்குச்சமீபத்திலுள்ள மற்றொரு நக்ஷத்திரம் ஒரு சமயம் சந்திரமண்டலத்தில் வீழ்ந்தது. அதனால், புதனென்கிற வேறொரு நக்ஷத்திர உலகம் உண்டாயிற்று என்ற இந்த விருத்தாந்தத்தையே ஆச்ரயமாகவைத்துத் தாராசசாங்கம் என்கிற கதையை உண்டுபண்ணிப் பௌராணிகர்கள் வர்ணிக்கிறார்கள். அந்தக் கதையை நாம் யதார்த்தமாக நம்பக்கூடாதென்று ககோளசாஸ்திரம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

ச:— பதினாறாயிரம் கோபஸ்திரீகளை மணம்புரிந்து பகவான் வாசுதேவன் ஒவ்வொருவீட்டிலும் ஏககாலத்தில் தனித்தனியிருந்ததாக நாரதர் கண்டிருக்கிறார். கோபிகைகள் விஷயத்திலும் இவ்விதமே. இக்கதைகளின் உட்கருத்தை ஆராயுங்கால் வீடு முதலிய எல்லாவற்றையும் துறந்து, பரமாத்மாவையே இடைவிடாமல் தியானம் செய்கிற ஜீவர்கள், சுத்த ஸத்வமானலோகத்தில் ஒரேகாலத்திற் பரமாத்மாவையடைந்து பணிவிடைசெய்து நித்யமான போநந்தத்தையடைகிறார்கள் என்கிற வேதாந்தத்தினுட்கருத்து இவ்விதக் கதைகள்மூலமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறதென்று விவேகிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். அதுபோலவே நக்ஷத்திரங்களின் விஷயங்களிலு மிருக்கலாம்.

கா:—அம்மா! அத்யாத்மஸ்வரூபங்களை நிரூபணஞ்செய்வதற்காக இவ்விதக்கதைகளை ஏன் சொல்லவேண்டும்? இவற்றால், ஆராய்ச்சியில்லாதசாதாரணஜனங்கள் கிருஷ்ணன் கோபஸ்திரீகளைத்தழுவினனென்றும், கள்ளனென்றும், இடையனென்றும், பூஜைசெய்ய அருகனல்லவென்றும், தப்பான அபிப்பிராயங்கொண்டு 'எல்லாங் கிருஷ்ணார்ப்பணம்' என்று இடைவிடாது தியானஞ்செய்துவருகிற நம்முடைய மதக்கோட்பாட்டைத் தூஷணம் செய்யவும் கிளம்புகிறார்களே.

ச:— 'எல்லாம் கிருஷ்ணார்ப்பணம்' என்கிறவாக்கியத்திலேயே துர்ப்புத்திகள் கூறுகிற தூஷணங்களுக்கு நல்ல சமாதானம் விளங்குகிறதே. இது ஒரு பெரியவிஷயம். இதைப்பற்றி வேறொருசமயத்திற் பேசுவோம்.

(தொடரும்)

வித்யாநிதி. ர. கிருஷ்ணமாசாரியர் **M. A.**

மதுரை.

குறிப்பு:—இப்பகுதியில் இடமின்மையால், புத்தகமதிப்புரை வெளியிடப்படவில்லை. அடுத்த பகுதியில் வெளிவரும்.

பத்திராதிபர்.

# 1921-ஆம் ஆகஸ்டுமீ 16உ (துர்மதிஆம் ஆவணிமீ 1உ) காலை 11-மணிக்குக்கூடிய மதுரைத்தமிழச்சங்கத்தின் காரிய நிர்வாகஸபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

1. மாட்சிமைதங்கிய கனம் B. இராஜராஜேச்வர ஸேதுபதி மன்னரவர்கள்—அக்கிராசனாதிபதி.
2. மகா-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர் P. சுப்பராய ஐயரவர்கள், B.A.,
3. ,, M. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள், B.A., B.L.,
4. ,, T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள், B.A., B.L., M. L. C.,
5. ,, வித்துவான் R. இராகவையங்காரவர்கள்,

இவர்கள் வந்திருந்தார்கள்.

I. 1921-ஆம் ஜூலைமாத வரவுசெலவு கணக்குகளை அங்கீகரிக்கலாயிற்று.

II. மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினராக வேண்டுமெனக் கோரிய அடியிற் குறித்துள்ளவர்களை அங்கத்தினராக அங்கிகரிக்கலாயிற்று.

(1) மகா-ா-ா-ஸ்ரீ M. ராமையா முதலியாரவர்கள், தமிழ்ப்பண்டிதர், போர்டு ஹைஸ்கூல், திருத்துறைப்பூண்டி.

(2) ,, பண்டித. R. திம்மப்பையர் அவர்கள், உதவித் தமிழ்ப்பண்டிதர், சேலம்காலேஜ், சேலம்.

III. சங்கப்பதிப்புப் புத்தகங்களைச் சாதுர்மாஸ்ய ஸங்கற்ப மஹோத்ஸவத்தன்று ஸ்ரீவானமாமலை ராமாநுஜஜீயர்ஸ்வாமி அவர்கள் ஸந்நிதானத்தில் இனாமாக ஸமர்ப்பித்ததை அங்கீகரிக்கலாயிற்று.

IV. சங்கப்பரீக்ஷையிற் றேர்ச்சிபெற்ற மாணவர் ஒருவரின் அம்சங்களைக்குறித்தனுப்பவேண்டுமென்று சேலம்காலேஜ் தலைமைத்தமிழ்ப் பண்டிதர் மகா-ா-ா-ஸ்ரீ T. S. நடராஜையரவர்கள் கேட்டுக்கொண்டபடி Speial case ஆகக் குறித்தனுப்பும்படி தீர்மானிக்கலாயிற்று.

V. சங்கக்கட்டிடத்தின் நடுக்கூடத்தை லாந்தவும் மேல்மாடியில் தாழ்வாரம் இறக்கவும் தயாரிக்கப்பட்டுள்ள (Estimate) மதிப்புத்திட்டத்தை மகா-ா-ா-ஸ்ரீ ராவ்பகதூர்P.சுப்பராய ஐயரவர்கள் பார்வையிட்டு அபிப்பிராயம் கொடுத்ததன்மேல் அங்கீகரிக்கவேணுமென்று தீர்மானிக்கலாயிற்று.

VI. 1921–22-ம் ஆண்டிற்குத் தயாரித்துள்ள வரவுசெலவு மதிப்புத்திட்டம் (Budget) அங்கீகரித்தல் தள்ளிவைக்கலாயிற்று.

VII. சங்கத்தின் வருஷோத்ஸவகாலத்தில் வாசிப்பதற்காகத் தயாரிக்கலான சென்றஆண்டின் அறிக்கைப்பத்திரம் அங்கீகரிக்கலாயிற்று.

B. இராஜராஜேச்வரஸேதுபதி,
அக்கிராசனாதிபதி.
மதுரைத்தமிழ்ச்சங்கம்.

மதுரை.
16—8—21.

எ-து, உடுக்கையு மருந்து முறையுமிடமு முணவு மென விப்பெற்றிப்பட்டனவற்றைப் பிறர்க்குக்கொடுத்து மற்றவர்வறுமைதீர்த்தலைவல்லராய்விடுத்துவைத் தினியசொற்களைச் சொல்லாமையென்று சொல்லுவர், தின்னவேண்டியெருமையெறிந்தவர் காயக்கு லோபஞ்செய்யுமாறுபோலு மதுவென்றவாறு.

(குறிப்பு.) இது, பிறர்க்கு ஒன்று உதவுமிடத்து இன்சொல்லோடுதவவேண்டு மென்கிறது. பிறர்—துறந்தோரும் வறிஞரும். ஆற்றிவிடுதல் ஒருசொல். ஆற்றல்—வல்லமை. வல்லராய்விடுத்துவைத்து என்றது வல்லராய்விட்டவராயிருந்துகொண்டு என்றபடி; ஆய்விடல் வல்லமையின் றேர்ச்சிப்பேறுணர நின்றது. இனியசொற்களாவன ஏற்போர்மாட்டு விருப்போடுதவும் குறிப்பினை வெளிப்படுத்தி அவரை யுவப்பிக்கும் நல்லுரைகள். சொல்லீயாமை ஒருசொல்; சொல்லாமை என்றபடி. எருமை—எருமைக்கடாவை. எறிந்து—அடித்துக்கொன்று. காயக்கு—கறிசமைக்கச் சம்பாரமிடுதற்குவேண்டும் உள்ளிப்பூடு முதலாயின வுதவுதற்கு. லோபஞ்செய்தல்—பொருட்செலவுசெய்யாமை. ஆறுபோலுமது—ஆறுபோல்வது. இனிய சொற்களைச் சொல்லாமை காயக்கு லோபிக்குமாறுபோல்வதென்று அறிவுடையோர் சொல்லுவர் எனக் கூட்டிமுடித்துக் கொள்க. அரிதிற் பெறுதற்குரிய எருமையிறைச்சி யெய்தப்பெற்றவொருவன எளிதிற்பெறுதற்குரிய காயமிடாதாக்கியவழி அது சுவை குன்றியொழிவதுபோல அரிதி லுதவுதற்குரிய உடுக்கை மருந்து உறையுள், உண்டிமுதலியவற்றை ஆதுலர்க்கு அளிக்குமொருவன் எளிதி லுதவுதற்குரிய இன்சொல்வழங்காதவழி அவ்வுதவி பயன்குன்றி யொழியுமெனப் பொருளொடு பொருத்தி யுரைத்துக்கொள்க. இதன் பழமொழிவடிவம் வந்தவழிக் கண்டுகொள்க.

168. ஓர்த்த கருத்து முணர்வு முணராத
மூர்க்கற் கயதி மொழியற்க—மூர்க்கன்முன்
கொண்டதே கொண்டு விடானது மாகாதே
யுண்டது நீலம் பிறிது.

எ-து, தானோர்த்தகருத்தினையு முலகொழுக்கத்தினையு மறியாதமூர்க்கனுக்கு மனத்தாலிகழ்ச்சியின்றி யிகழ்ந்ததுபோலநகையாடியுரைக்குமுறையைத் தவிர்க்க, மூர்க்கன் முன்கொண்டதனையேமனத்தின்கட்கொண்டு விடானதலால், நீலநிறத்தை யுண்டதொன்று பிறிதொருநிற மாகாததுபோலு மென்றவாறு.

(குறிப்பு.) இது, மூர்க்கரோடு பரிகாசவார்த்தைபேசலாகா தென்றெது. தானேர்த்தகருத்து—பேசுவான் ஆராய்ந்து குற்றமின்றிச்சொல்லும் கருத்து. உணர்வு உணர்வானறியப்படு மூலகியலுக்கானமையாலாகுபெயராயிற்று. உலகொழுக்கம்—உலகவழக்கம். இவ்விரண்டுமெறிதல், அசதியாடலிதுவெனவறிந்து அதனை மனத்துட் கொள்ளாதுவிடுதற்கு ஏதுவாமாதலால் இவையறியாமை கொண்டதேகொண்டுவிடாமைக்கேதுவாயிற்று. மூர்க்கன் பிடிவாதஞ்செய்யுமியல்புடையோன். அயதி—ஹஸதி என்னும் வடமொழிச்சிதைவு. அது நகைத்தல் என்னும் பொருளுடைமையான் ஆகுபெயராக்கி 'மனத்தாலிகழ்ச்சியின்றி யிகழ்ந்ததுபோல நகையாடியுரைக்குமுரையை' எனப்பொருள் விரித்துரைக்கப்பட்டது. மூர்க்கன் முன்கொண்டதனையே மனத்தின்கட்கொண்டு விடானாதலால் என்றது நகையாடியுரைக்குமுரையால் தன்னையிகழ்ந்தனாக மனத்தின்கட்கொண்டதனை மூர்க்கன் ஒருவாற்றானும் விடானாதலாலென்றவாறு. நீலநிறத்தையுண்டது என்றது சாயத்தாற் கருநிறமாக்கப்பட்டதொன்று என்றவாறு. பிறிதொருநிறமாகாது என்றது பிறிதொருசாயத்தாற் செந்நிறமுடையதாக மாறுபடாதென்றவாறு. நீலமுண்டது பிறிதாகாது; அதுபோல் மூர்க்கன் முன்கொண்டதே கொண்டு விடானாதலால் 'மூர்க்கற்கயதி மொழியற்க' எனக் கூட்டி முடித்துக்கொள்க. முதலையும் மூர்க்கனும் கோண்டதுவிடா என்பது இதன் பழமொழி. அது இங்கு ஏதுவாயிற்று "நீலமுண்டது பிறிதாகாது" என்பதும் ஒரு பழமொழியாய் இங்குத் திட்டாந்தமாயிற்று.

169. காப்புடையார் வைத்த கடையு முதவா
தாப்புடைய மன்னர்க்கே துப்புரவ தல்லா
லிரப்பிடும்பை மிக்கார்க் குதவவொன் றீதல்
சுரத்திடைத் தீரப் பெயல்.

எ-து. பகைவரைத்தாக்குந் தாப்பையுடையவரசர்க்கே யுதவுவதன்றிப் பிறர்க் கில்லையென்றுகாக்குங் காப்புடையார்வைத்தபொருள்கள் பின்புந் தமக்குதவமாட்டா; இடும்பைமிக்கா ரிடும்பைக் குதவவொருபொருளை யீதல் வெயிலாற் சுடப்பட்ட வெஞ்சுரத்தின்கண் மிகவு மழைபெய்ததனேடொக்கு மென்றவாறு.

(குறிப்பு.) இது, மிக்கபொருளுடையார் இவறலின்றி வறியோர்க்குப் பொருளானுதவிபுரிகவென்கிறது. 'காப்புடையார்வைத்த தூரப்புடைய மன்னர்க்கே துப்புரவதல்லால், கடையுமுதவா' எனக் கூட்டுக. பகைவரைத் தூக்குந் தூரப்புடைய வரசர் என்றது அவரது செலவுமிகுதியானும் வலிமிகுதியானும் செலவொன்று மில்லாதார் தேடிக்கூட்டி வாளாவைத்த வைப்பினைப் பறித்துக்கொள்ளுமியல்புணர்த்தியவாறு. பிறர்க்கு என்றது அவர்க்கு மறுதலையாயுள்ள வறிஞர்க்கு என்றவாறு. வைத்த, பொருள்கள்—வழங்கலுந் துய்த்தலுமின்றி யிவறிக்கூட்டிச் சேமித்து வைத்த பொருள்கள். பின்புந் தமக்குதவமாட்டா என்ற உம்மையால் முன்பு தமக்குதவமாட்டாது நின்றே காலங்கழித்த அப்பொருளின தியல்புகொண்டு பின்பு முதவாமை தெளிவித்தவாறு. இடும்பைக்குதவ என்றது இடும்பைதீர்த்தற்கு உதவியாக என்றபடி. ஒருபொருளையீதல் என்றது அவரிடும்பை தீர்தற்குரிய யாதேனுமொருபொருளை எவ்வாறீயினும் அவ்வீகை யென்றவாறு. வெஞ்சுரம் நீர்ப்பசையற்ற சுடுநிலம். மிகவும் பெய்தல்—அந்நிலங்குளிரப்பெய்தல். நீர்நிலையிற்பெய்யும் மழையினும் சுரத்திடைப்பெய்யும் மழையே பிறரால் மகிழத்தகுமாறுபோல வலியசெல்வராகிய அரசர்க்குதவுதலினும் எளியவறியோர்க்குதவுதல் மிகவும் மகிழத்தக்கதெனப் பொருளொடு பொருத்தி யுரைத்துக்கொள்க. இதன்பழமொழி வருந்துவோர்க் குதவு முதவிக்கு மருகாந்தாரத்திலே யொருபாட்ட மழைபெய்தாற் போலே என உவமைபற்றி அடிப்பட வழங்கப்பட்டுவரும் தொடர் மொழியாம்.

170. உரிஞ்சி நடப்பாரை யுள்ளடி நோவ
நெருஞ்சியுஞ் செய்வதொன் றில்லை—செருந்தி
யிருங்கழித் தாழு மெறிகடற்றண் சேர்ப்ப
பெரும்பழியும் பேணாதார்க் கில்.

எ-து, தம் மடியின லுரிஞ்சிநடப்பாரை யுள்ளடிநோவ நெருஞ்சிமுள்ளுஞ் செய்வதொன்றில்லை; அதுபோலச் செருந்திமரங்க ளிருங்கழியிலேவந்து தாழத் தழைக்கு மெறிகடற்றண்சேர்ப்பனே! பெரும்பழியு மஞ்சிப் பாதுகாவாதார்க் கில்லை யென்றவாறு.

(குறிப்பு.) இது, நெறிகடந்தொழுகுவார் பழிக்கஞ்சார் என்கிறது. உரிஞ்சி—தேய்த்து. உள்ளடிநோவ என்றது அதன்மீது அடியெடுத்து வையா திருக்கும்படிமிக்கதுன்பமுண்டாக என்றவாறு. நெருஞ்சியும் என்

றது நெறிப்படநடப்பா ரடியிடவருந்தும் நெருஞ்சிமுள்ளும் என்றவாறு. செய்வதொன்றில்லை என்றது அதுசெய்புந்துன்பத்தை நெறிகடந்து நடப்பார் ஒரு பொருட்படுத்தாராதலா லவர் அதற்கஞ்சமாட்டா ரென்ற வாறு. இவ்வாறே 'பெரும்பழியும் அஞ்சிப் பாதுகாவாதார்க்கில்லை' என் பதற்கு நெறிகடந்தொழுகுவார்க்குப் பெரும்பழியுளதாயினும் அதனை அவ ரொருபொருட்படுத்தாமையால் அவர் அதற்கு அஞ்சார் என்பது கருத்தாகக்கொள்க. அவரை நம்பலாகாதென்பது குறிப்பு. நெருஞ் சிக்கஞ்சா துரிஞ்சிநட என அதிக்கிரமத்திலொழுக்குவார் கூறும் அடிப்பட்டகூற்றே இங்கெடுத்துக் கொண்ட பழமொழியாம்.

171. மாரியொன் றின்றி வறந்திருந்த காலத்துப்
பாரிமடமகள் பாண்மகற்கு–நீருலையுட்
பொன்றிறந்து கொண்டு புகாவாக நல்கினு
ளொன்றூறு முன்றிலோ வில்.

எ-று, மாரியென்பதொன்றின்றி யுலகம்வற்றியிருந்தகாலத்துப் பாரிமடமக ளிரந்துவந்தானொருபாண்மகற்குச் சோறுபெறுமையா லுலையுட் பொன்னைப் பெய்துகொண்டு திறந்த சோறாகவே நல்கினு ளாதலா லொருதன்பமுறுதமனை யில்லை யென்றவாறு; அல்லதூஉஞ் சோறுமரிதாகியகாலத்துப் பொன்னே சோறாக வுதவினுளாதலாற் சென்றிரந்தா லொருபயன்படாதமனையில் லை யென்றவாறு.

(குறிப்பு) இது,குடிவாழ்க்கையுடையார் முட்டுப்பாடுற்றவிடத்தும் தம்மையடைந் திரந்துநிற்பார்க்குத் தம்மா லியல்வதொன் றேதேனு முதவவேண்டு மென்கிறது. மடமகள்–மடமையுடைய பெண்டாட்டி; இங்கு மடமை, தியுலையுள்வேகும்பொன்னை நீருலையுள் வேகவைத்த முயற்சிக்கேற்ற கருத்துடையடையாயிற்று. நீருலை என்றது உலையை வெளிப்படையாக்கியபடி; வியப்புக்குறிப்புமாம். மூலத்துள், 'பொன் றிறந்து கொண்டு' என்றிருப்பது சில பிரதிகளிற் 'பொன்றந்துகொண்டு' என்று காணப்படுகிறது. பொன்றிறந்துகொண்டு என்ற பாடத் தின்னும் அதனுரையுள்ளும் 'திறந்து' என்பதற்கு ஒரு பொருட்சிறப் பின்மையால், 'பொன்றந்துகொண்டு' என்ற பாடமே சிறந்ததென்று கொள்ளத்தக்கது. சோறுபெறுமையால் எனக் காரணம் விரித்துரைக் கப்பட்டது. பொன்னைப் பெய்துகொண்டு என்றது பொற்காசுத்தைப் பெய்துவைத்துக்கொண்டு என்றவாறு; உணவு உறு என்றுவதுபோலப்

புகவு புகாவென்றாயிற்று. புகவு வாயுட் புகுதலால் அப்பெயர்பெற்றது. சோறாகவேநல்கினுளென்றது உணவாகப்பாவித் துதவினாளென்றபடி. ஒருதுன்பமுறாதமனையில்லை என்றது குடிவாழ்க்கை யுடையார்க்குப் பொருண்முட்டுப்பாட்டாற் றுன்பம்வருத லியல்பு; அது பொறுத் தொழுகற்பால தென்றவாறு. அல்லதூஉம் என்றது இப்பொருளுடன் பொருந்த இரட்டுறமொழிதலாற் பிறிதொருபொருளுமுண் டென்ற குறிப்புணர்த்தியவாறு. சென்றிரந்தால் ஒருபயன்படாதமனை யில்லை யென்றது மனைவாழ்க்கை யுடையார் இரப்பார்க்குத் தம்மாலியல்வ தேதேனுமொன்றை யுதவி யுபகரிக்கவேண்டுமென்னும் குறிப்புணர்த்திய படி. வீடென்றிருந்தா லேதேனுமிருக்கும் என அவ்விருபொருளும்ப டவழங்கும் உலகவழக்கே யிங்கெடுத்துக்கொண்ட பொருளையுணர்த்தும் பழமொழியாயிற்று. இதனுள், எதேனுமிருக்கும் என்பது எதேனு மொருகுறைபாடிருக்கு மெனவும், இரப்பார்க்குதவும்படி யேதேனு மொருபொரு ளில்லாமற்போகாதெனவும் இருபொருளுந் தோன்ற நின்றமை காண்க.

172. உறுமக னாக வொருவனை நாட்டிப்
பெறுமாற்ற மின்றிப் பெயர்த்தே யொழிதல்
சிறுமைக் கமைந்ததோர் செய்கை யதுவே
குறுமக்கள் காவு நடல்.

எ-து, தனக்குறுதிசெய்வானொருமகனாக வொருவனை யொருகருமத்திலே நிறுத்தி யவன்செய்த தொருகுற்றமுண்டென்னுஞ்சொல்லின்றியே யவனை யக் கருமத்தினின்று தவிர்த்தொழிதல், சிறுமைக்குணத்துக்கெல்லா மமைந்ததொரு செய்கையாம்; அது பிள்ளைகள் காவுநடுதலோடொக்கப் பயன்படாதா மென்ற வாறு.

(குறிப்பு.) இது, அரசன் உத்தியோகத்திலிருப்பவரை யொருகுற்ற மின்றித்தவிர்க்கலாகாதென்கிறது. தனக்கு என்றது காரியங்கொள்ளு தற்குரியோனாகிய அரசனுக்கு என்றபடி. உறுதி-தொழிற்பெயர்; சாதியொ ருமை. உறுதிசெய்தல்—உறுவனவாகியகாரியங்களைச்செய்தல். கெடுதி யைச்செய்யுங்காலத்தைக் கெடுகாலமென்பதுபோல உறுதியைச்செய்யும் மகனை "உறுமகன்" என்றார். கருமம்—உத்தியோகம். நிறுத்தி—வைத்து. பெறுமாற்றம்-ஒருகுற்றந்தோன்றியவழி அவனை விசாரித்து அவனி

டத்துநின்று குற்றமுண்டென்று பெற்ற மறுமொழியாகிய பிரத்தியுத்தரம். தவிர்த்தொழிதல்—ஒருசொல்; விலக்குதல் என்றபடி. சிறுமைக்குணம்—சிறுபிள்ளைத்தனமாகிய செயல்கள்; அவை தீரவிசாரியாமை, மனஞ்சென்றபடியேசெய்தல், செயலின்விளைபயன் கருதாமை, பிறர் துன்பமறியாமை முதலியன. அமைந்தது—பொருந்தியது. ஒரு செய்கையாம் என்றது சிறுமைக்குணங்கள் பலவற்றிற்கு மிலக்கியமாயமையுமிச்செய்கையின் சிறுமைப்பாட்டின் மிகுதி காட்டியவாறு. "குறுமக்கள் காவுநடல்" என்பது பழமொழிக்கூற்று. இதனைச் சிறுபிள்ளைகள் தோட்டம் வைத்து விளையாடுமிடத்து ஒரு செடியை ஓரிடத்துநாட்டிப் பின்பு ஒருகாரணமுமின்றி அதனைப் பிடுங்கியெறிவதும், வேறிடத்து நடுவதுமாகிய அவர் விளையாட்டுச்செயலால் அச்செடிகட்குத் தீங்குண்டாதலன்றி வேறொருபயனும் விளையாதவாறுபோல, உறுமகனாக வொருவனை நாட்டிப் பெறுமாற்றமின்றிப் பெயர்த்தொழியும் சிறியார்செயலாலும் நாட்டப்பட்டார்க்குத் தீங்குண்டாதலன்றி வேறொருபயனும் விளையாதெனப் பொருளொடுபொருத்தி யுரைத்துக் கொள்க.

173. அல்லது செய்வா ரரும்பொரு ளாக்கத்தை
நல்லது செய்வார் நயப்பவோ—வொல்லொலிநீர்
பாய்வதே போலுந் துறைவகே ளீயன
வாவதே போன்று கெடும்.

எ-து, பாவத்தைச்செய்வாரரும்பொருளதிட்டத்தை நல்லவறத்தைச் செய்வார் விரும்புவரோ? ஒல்லொலிநீர் பார்மேலேறிப் பரப்பதே போலுந் துறைவனே! கேளாய்; தீயகருமங்கள் செல்வமாவதொருகருமம் போலேயிருந்து கெட்டுப்போமாதலா லென்றவாறு.

(குறிப்பு.) இது, தீவினை புரிந்து பொருளீட்டலாகா தென்கிறது. தீயகருமக்களாவன, அருளும் அன்புமின்றிப் பாவமும் பழியும் பாராது பிறரைவஞ்சித்தல் முதலியன. செல்வமாவதொரு கருமம்போலேயிருந்து என்றது ஆக்கத்திற்குக் காரணமாவதுபோலே தோன்றி என்றவாறு. கெட்டுப்போம் என்றது ஆக்கத்தையளிக்காததனை யழித்துக் கெடு மென்றவாறு. ஆவதுபோலக்கெடும் என்ப திதன் பழமொழி. இது, "களவினாலாகிய வாக்க மளவிறந்-தாவது போலக் கெடும்"* எனக் குறளில் வழங்கப்பட்டது.

---

* 29-ம் அதி கள்ளாமை-3.

174. யாந்தீய செய்த மலைமறைத்த தென்றெண்ணித்
தாந்தீயார் தந்தீமை தேற்றார்—லாம்பன்
மணவில் கமழு மலிதிரைச் சேர்ப்ப
கணையிலுங் கூரியவாங் கண்.

எ-து, யாஞ்செய்ததீவினைகளைப் பிறர்க்குவெளிப்படாமன் மலைமறைத்த தென்றுகருதித் தீயார் தாஞ்செய்ததீமையைத் தெளியாரால்; ஆம்பற்பூக்கள் கலியாணஞ்செய்யுமனைபோலக் கமழாநின்ற மலிதிரைச்சேர்ப்பனே! அம்பினுங் கூரியவா யுட்புக்குக் கண் மறையச்செய்தபொருள்களைக் காணவல்லவா மென்றவாறு. அம்பு குறித்தெய்ததானமொழித்துப் படாது, கண் பலவிடத் தும்படு மென்றதாம்.

(குறிப்பு.) இது, ஒருவருமறியாரென்று மறைந்திருந்து தீவினைசெய் யற்கவென்கிறது. இங்கு மலைஉபலக்ஷணமாதலால் மதிள், இருள் முதலிய மறைப்பனபிறவும் பொருளாகக் கொள்க. தீயார்—தீப்போலுஞ் சுடுதொழி லுடையார். தாஞ்செய்த தீமையைத் தெளியார் என்றது மலையகத்து மறைவிற் காடுபற்றியெரியுந் தீ தான் செய்யுங்கெடுதியைத் தான் றெளி யாதாயினும் புறத்தேயுள்ள பிறர் புகைமுதலியகுறிகளாற் றெளிவது போல மறைவிடத்திருந்து தீயார்செய்யுங் கெடுதியை அவர் தெளியா ராயினும் அதற்குரிய குறிகளாற் பிறர் தெளிவரென்றவாறு. கண் பல விடத்தும்படு மென்றது அது காணக்கருதும்பொருளினும் அதனைக் கருதியுணருங் குறிகளினும் பலவாறுகப்பட்டுப் பொருளையுணருங் கரு வியா மென்றவாறு. கணையிலுங்கூரியகண் என்பது இதன் பழமொழி.

175. வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யாலும் வலியராய்த்—தாளாண்மை
தாழ்க்கு மடிகோ ளிலராய் வருந்தாதார்
வாழ்க்கை திருந்துத லின்று.

எ-து, பிறர்க்குபகாரஞ்செய்து வந்தவிருந்தகளையுமோம்பி வெய்யபோரின் கண் வாளாற்செய்யுமாண்மையாலும் வலியராய்த் தாளாண்மையைக் குறைவிக் குஞ் சோம்புகோடலையிலராய் முயன்றுவருந்தாதாருடையமனைவாழ்க்கை திருந்துதலில்லையென்றவாறு.

(குறிப்பு.) இது, மனையறம்புரியுந்திறங் கூறுகிறது. பிறர்க்குபகாரஞ் செய்தலாவது ஒருதளர்ச்சியுற்றார்க்கு மனமொழி மெய்களாலும்பிறவாற்றாலும் வேண்டுமுதவிபுரிதல். விருந்து—இங்கு ஐவகை வேள்விக்கு உபலக்ஷணம். வெஞ்சமத்து வாளாண்மையாலும் வலியராய் என்றது பொருட்கேடுவிளைக்கும் விரோதிகளைப்போக்குந்திறமுடையாராய் என்றபடி. தாளாண்மை—முயற்சி. சோம்புகோடல்—சோம்பலுடையாதல். முயன்று—பொருள்படைக்கமுயன்று. திருந்துதல்—செவ்விதாதல். வருந்தாதார் வாழ்க்கை திருந்தாது என்பது இதன் பழமொழி.

176. உரைத்தவர் நாவோ பருந்தெறியா தென்று
சிலைத்தெழுந்து செம்மாப் பவரை—மலைத்தா
விளைத்த திகவா தவரைக் கனற்றிப்
பலிப்புறத் துண்பா ருளை.

எ-று, பிறரையுரைக்கத்தகாதனவற்றையுரைத்தவர்நாவினைப் பருந்தெறியாதென்றுசொல்லி யெல்லாருடனும்வெகுண்டெழுந்து களிப்பாலே தம்மொடு மாறுபட்டார், அம்மாறுபட்டாரைச் செய்யநினைத்தனசெய்துமுடிக்கவல்லாரை வெருள்வித்து மாறுபட்டாராற் றிறந்துபோய்ப் பலியிடுங்கல்லின்புறத் திட்ட வுணவினையுண்பரென்றவாறு.

(குறிப்பு.) இது, ஒருவரையும் அதிக்கிரமித்துப் பேசுதலாகாதென்கிறது. உரைக்கத்தகாதன—பழிமொழிகள். பருந்தெறியாதென்று என்றது ஒறுப்பாரில்லையென்று என்றவாறு. சொல்லி யென்றது தாம் எண்ணுதலோடமையாது அக்கருத்தைப் பிறருமறியச்சொல்லி யென்றவாறு. பலியிடுங்கல்—பிண்டபலியும் பிரபூதபலியும் இடுதற்கு ஊன்றிய (பாஷாணஸ்தாபனம்பண்ணிய) கல். அக்கல்லின்புறத்திட்டவுணவு—வாஸோதக திலோதகங்களும் பலிகளும். உண்பர்—உணவாகக்கொள்வர். இதனால் உயிரிழப்பரென்பது குறிப்பாயிற்று. ஒறுப்பவரில்லையென்னுங் கருத்தில், பருந்தெறியாது என வழங்கும் குறிப்புமொழியே இங்கெடுத்துக்கொண்ட பழமொழியாயிற்று. இது, 'இருந்தபடி சொன்னாற் பருந்தடிக்குமோ?', எனவும் இதன் பொருள்பற்றித் 'தீயென்றால் நாவேகுமோ?', எனவும் வழங்கப்படும்.

177. களமர் பலராலுங் கள்ளம் படினும்
வளமிக்கார் செல்வம் வருந்தா—விளைநெல்
லரிகா லணைதிறக்கு மூரா வறுமோ
எரிக்கிற் றென்று கடல்.

கண்ணிலப்ப, உடனே இரத்தம் ஒழுகாதிருந்ததுகண்டு, தாஞ் செய்த செயலை மதித்து மகிழ்ந்து கூத்தாடிக் களிப்புற்றிருந்தார். திண்ணனு ரன்பினைப் பின்னுமறிவிக்கவேண்டிச் சுவாமி இடக்கண்ணில் உதிர மொழுக இருந்தார். அதைக்கண்ட திண்ணனூர் இதற்கஞ்சேன்; மருந்து கைகண்டிருக்கின்றேன்; அதனால் இன்னுமொருகண்ணைத்தோண்டி அப்பிவிடுவேனென்று தங் கண்ணைத்தோண்டியப்புவதற்குச் சுவாமிகண் ணேர்தெரிவதற்காகச் சுவாமி வலக்கண்ணிலே தம் இடதுகாலையூன்றி, அம்பையெடுத்துத் தம் வலக்கண்ணி லூன்றினர். உடனே சுவாமி தம் திருக்கையால் திண்ணனூர்கையைத் தடுக்க, "நில்லு கண்ணப்ப" வென மூன்று அடுக்குவார்த்தை யெழுந்தன. இவையெல்லாம் சிவ கோசரியார் பார்த்து மகிழ்ந்திருந்தனர். தேவர்கள் பூமாரிபொழிந் தனர். சுவாமி திண்ணனுரை 'என் வலப்பக்கத்தே நிற்க' வென் றருளிச் செய்தார். இதனாலே திண்ணனூர் கண்ணப்பநாயனுரெனப் பெயர் கூறப்பெற்றூர். (பெரியபுராணம்.)

கீரையும் மாவடுவும் ஒரு தோண்டரீந்தா ரேன்றது அரிவாட்டாய நாயனுரை. இவர் சோழநாட்டிலுள்ள கணமங்கையென்னு மூரிலே வேளாண்குடியிலவதரித்த தாயனுரென்னும் பெயருள்ளவர். சிவபெரு மானிடத் தன்புள்ளவராய், அவர்க்குச் செந்நெலரிசி செங்கீரை மாவடு வைத் திருவமுதாகச் செய்வித்து வருவார். வறுமைவந்தகாலத்திலும் இவர் செய்யுஞ் செயலை யுலகறியும்படி, இவர் செல்வத்தைச் சிவபெரு மான் நீக்கியருளினர். தாயனர் அப்போதுந் தஞ் செய்கையைவிடாது நடத்திக் கூலிக்கு நெற்கதி ரறுத்துக் கூலிவாங்கிச் செந்நெல்யாவும் சுவாமிக்கே யாக்கிக் கருநெல்லைத் தம் உணவிற்காக்கிவந்தார். சுவாமி, வயலெலாஞ் செந்நெலாகவே விளையச்செய்தனர். தாயனு ரதுகண்டு நான் செய்தபுண்ணியமே யென்று, கூலிக்குவரும் செந்நெல்யாவும் சுவாமி திருவமுதுசெய்யக் கொடுத்துவிட்டு மனைக்கொல்லையிலிருந்த கீரை யினைக்கொய்து மனைவியார் சமைத்து வைக்கப் புசித்துத் தமது திருப் பணியைக் குறைவின்றிச் செய்துவந்தார். பின்பு அக்கீரையுங் கிடை யாமையால் மனைவியார் தண்ணீர்கொடுக்க வதனையு மருந்தியிருக்கு நாளிலே, ஒருநாள், சுவாமிக்காகச் செந்நெலரிசியும் செங்கீரையும் மாவடு வுங் கூடையிலெடுத்துக்கொண்டு தாமுஞ்செல்ல மனைவியார் பஞ்சகௌவி யத்தையெடுத்துக்கொண்டு பின்செல்லும்போது நாயனூர் தளர்ந்துவீழக்

கண்டு மனைவியார் கைபாலணைக்க அரிசிமுதலாயின கமரிலே சிந்திவிட்டன. தாயனார் வருந்தி யினி யாலயத்திற்குப் போவதெதற்காக? சுவாமி திருவமுதுசெய்யும்பேறுபெற்றிலேனே யென்று கையிற்கொண்ட அரிவாளைப்பூட்டித் தன் கழுத்தை யரிந்தார். உடனே தாயனார்கையை மாற்றச் சுவாமி திருக்கையும், மாவடுவைக் கடித்ததனா லுண்டாகிய விடேல் விடேலென்கிற வோசையு மொக்கவே கமரினின்று மெழுந்தன. திருக்கை யரிவாளைப்பற்றுங்கையைப் பிடித்தபோது, கழுத்தையரிந்த ஊறெல்லாம் நீங்க, மகிழ்ச்சியுண்டாகத் தாயனார் சுவாமி திருவருளை நினைந்து, கும்பிட்டுத் தோத்திரஞ்செய்தார். சுவாமி யிடபவாகனரா யெழுந்தருளி நின்செயலை மகிழ்ந்தோம்; நீ நின்மனைவியுடனே நமது சிவலோகத்தையடைவாயென்று அவருடனே எழுந்தருளினர். கழுத்தினை யரிவாட்பூட்டியரிதலால் இவர் அரிவாட்டாயநாயனாரெனப் பெயர் பெற்றார். (பெரியபுராணம்.)

திருவிருந்த தண்டலையார் வளநாட்டி லில்வாழ்க்கை செலுத்து நல்லோ
ரொருவிருந்தா கிலுமின்றி யுண்டபகல் பகலாமோ வுறவாய் வந்த
பெருவிருந்துக் குபசாரஞ் செய்தனுப்பி யின்னமெங்கே பெரியோ ரென்று
வருவிருந்தோ டுண்பதல்லால் விருந்தில்லா துணுஞ்சோறு மருந்து தானே. (9)

இக்கவியில், பின்னிரண்டடியில், "செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா-னல்விருந்து வானத் தவர்க்கு" என்னுந் திருக்குறளையும், "விருந்திலாச்சோறுமருந்து" என்னும் பழமொழியையும் குறிப்பிட்டதறிக.

பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியுங் கொடுப்பதென்ன பொருளோ
நற்கமல முகமலர்ந்தே யுபசார மிக்கவின்சொ னடந்தா னன்றே [வென்று
சற்கரையு மொழிபாகர் தண்டலையார் வளநாட்டிற் கரும்பி னேய்ந்த
சர்க்கரையின் பந்தலிலே தேன்மாரி பொழிந்துவிடுந் தன்மை தானே. (10)

'சர்க்கரைப்பந்தலிலே தேன்மாரி பொழிந்ததுபோலிருக்கிறது' என்பது பழமொழி.

குறும்பென்று முயர்ந்தநல்லோ ராயிரஞ்சொன் னாலுமதைக் குறிக்கொளாமல்
வெறும்பெண்ணாசையிற்சுழல்வேன்மெய்ஞ்ஞானம்பொருந்தியுனைவேண்டேனந்
தறும்பெண்ணாமுடிமேற்சேர்தண்டலைநீணெறியேயென் னுண்மைதேறில் [தோ
ரறும்பெண்ணுமிரமப்பாற்றுறைதயுங்கைகடந்தெதென்றேனென்னைந்தானே(11)

"தண்டலைநீணெறியே" யென்று சுவாமியை நோக்கிக் கூறினாரென்றறிக. உலகினர்செய்யு நித்திய நைமித்திய காமியவினைகளை யேற்றநுக்கிரகம்புரிவதற்காகத் தலமுந் தீர்த்தமு மூர்த்தியுமாகச் சுவாமி வந்திருக்கிறபடியால் அவ்வாறுகூறினா ரென்க. "எறும்பெண்ணாயிரம்போனது அப்பாற் கழுதையுங் கைகடந்தது" என்ற வாக்கியம், ஒருமாணாக்கனுக்கு, ஓர் ஆசாரியர் நல்ல நீதிகளைப் போதித்துக்கொண்டிருந்து பின்பு யாவுந் தெரிந்தனையோவென்று கேட்க, அங்கேபோயின எறும்புகளை யெண்ணிக்கொண்டும், வந்துபோன கழுதைகளைப் பார்த்துக்கொண்டுமிருந்த வறிவிலாமாணாக்கன்கூறிய தென்க.

துப்பிட்ட வாலம்விதை சிறிதெனினும் பெரிதாகுந் தோற்றம் போலச்
செப்பிட்ட தினையளவு செய்தநன்றி பனையளவாச் சிறந்து தோன்றுங்
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார் வளநாட்டிற் கொஞ்ச மேனு
முப்பிட்ட பேர்கடமை யுளவரையு நினைக்குமிந்த வுலகந் தானே. (12)

இக்கவியிலே, "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரி வார்." என்ற திருக்குறளையும், "உப்புக்கொடுத்த பேரையுள்ளளவு நினைக்கவேண்டும்" என்னும் பழமொழியையுங் குறித்தறிக. கொப்பு—மாதர்காதணியினொன்று.

மேட்டுக்கே விதைத்தவிதை வீணருக்கே செய்தநன்றி மேயும் பட்டி
மாட்டுக்கே கொடுத்தவிலை பரத்தையர்க்கே தேடியிட்ட வண்மை யெல்லாம்
பாட்டுக்கே யருள்புரியுந் தண்டலையார் வீதிதொறும் பாப்பி டாமற்
காட்டுக்கே யெரித்தநிலாக் கானலுக்கே பெய்தமழை கடுக்குந் தானே. (13)

'காட்டுக்கெரித்த நிலவுங் கானலுக்குப் பெய்தமழையும் போலாகும்' என்பது பழமொழி. பட்டிமாடு-கள்ளமாடு.

சங்கையறப் படித்தாலுங் கேட்டாலும் பிறர்க்குறுதி தனைச்சொன் னாலு
மங்கனல கினிற்சிறியோர் தாமடங்கி நடந்துகதி யடைய மாட்டார்
திங்களணி சடையாரே தண்டலையா ரேசொன்னேன் சிறிது காலங்
கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரைக்காய் நல்லசுரைக் காயா காதே. (14)

'கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரை நல்லசுரையாகாது' என்பது பழமொழி.

உழைபிட்ட விழிமடவா ருறவுவிட்டும் வெகுளிவிட்டு முலக வாழ்விற்
பிழைவிட்டு மின்னமின்ன மாசைவிடா தலக்கழியப் பெற்றே னந்தோ

தழைவிட்ட கொன்றைபுனை தண்டலைநீ ணெறியேயென் றன்மை யெல்லா
மழைவிட்டுந் தூவானம் விட்டதில்லை யாயிருந்த வண்ணந் தானே. (15)

உழை-மான். 'மழைவிட்டுந் தூவானம் விடவில்லை' என்பது பழமொழி.

கொச்சையிற்பிள் ளைக்குதவுந் தண்டலையார் வளநாட்டிற் கொடியாய் வந்த
வச்சிரன்பிள் ளைக்குமுன மாதவனே புத்திசொன்னான் வகையுஞ் சொன்ன
வச்சுதப்பிள் ளைக்குமந்த வாண்டவரே புத்திசொன்ன ராத லாலே
துர்ச்சனப்பிள் ளைக்கூரார் புத்திசொல்லு வாரென்றே சொல்லு வாரே. (16)

கொச்சையிற்பிள்ளை-திருஞானசம்பந்தமூர்த்திநாயனர். கொச்சை யென்பது சீகாழித்தலத்திற் கொருபெயர். கொடி-காக்கை. வச்சிரன் பிள்ளை-இந்திரன்மகன். இங்கு மாதவனென்றது இராமபிரானை. அச்சுதப்பிள்ளை-விஷ்ணு. 'துர்ச்சனப்பிள்ளைக்கு ஊரார் புத்தி சொல்லுவர்' என்பது பழமொழி.

வச்சிரன்பிள்ளைக்கு மாதவன் புத்திசொல்லியது:—இராமபிரான் வனவாசஞ்செய்துவருங்காலத்து ஒருநாள், சீதாபிராட்டியின் வடிவழகைக்கண்டு மயங்கிய இந்திரன்மகன், காகவடிவமெடுத்துவந்து பிராட்டியின் தனதடங்களிற் றீண்ட, அதையறிந்த இராமபிரான் கோபித்து ஒருபுல்லை மந்திரித்து அம்பாகப் பிரயோகிக்க அது அவனைக்கொல்ல நெருங்கிற்று. அவன் இந்திரன்முதலிய தேவர்களிடம் சென்று ஒருவரும் காப்பாரிலாமையால் இராமனிடமே சரண்புக்கனன். கருணைக்கடலாகிய இராமபிரான் அவன்செய்த குற்றமானது எளிதில் மன்னித்துவிடக்கூடிய சிறியகுற்றமல்லவாதலாலும் தான் எய்த அம்பு வீண்படாதாதலாலும் அவனுடைய ஒற்றைக்கண்ணொளியை அம்புக் கிலக்காக்கி, அவன் காகவடிவெடுத்துவந்து குற்றஞ்செய்தமையால் மற்றைக்காகங்களுக்கும் ஒற்றைக் கண்ணொளி கெடச்செய்து அவனுக்கும் நற்புத்தி புகட்டியனுப்பினார் என்பது சரிதம்.

அச்சுதப்பிள்ளைக்கு முன மாண்டவரே புத்திசொன்னரென்பது:—போரிலே திருமாலுக்குப் பயந்த அசுரர், பிருகுமுனிவருடைய ஆச்சிரமத்தில்வந்து அம்முனிவர்மனைவி கியாதியினிடம் அடைக்கலம்புக, அவள் பாதுகாத்தனள். அதுகண்ட திருமால் அவளைக்கொன்றுவிட, முனிவர் கோபித்துத் திருமாலுக்குப் பத்தவதாரமுண்டாகச் சபித்தார்.

உடனே திருமா லச்சாபநீங்கக் காஞ்சியிற் சிவலிங்கபூசைசெய்யச் சுவாமி காட்சிதந்து "திருமாலே! நம்மடியவர்க்குத் தீங்கியற்றினரைத் தண்டிப்பதே தருமம்; நம்மடியவர் எதைக்குறித்து என்னசொன்னாலுந் தவற மாட்டாது. நினக்குக் கூறிய சாபமும் பலிக்குமேயன்றித் தவறாது. எம்மை வழிபடுந்தன்மையால், நீ கொள்ளுந் தசாவதாரமு முலகினுக் குபகாரமாகுக" வென்று புத்திகூறி விடுத்தருளினர். இவ்வாறு பல கதைகளுமுண்டு.

கறுத்தவிட முண்டருளுந் தண்டலையார் வளநாட்டிற் கடிய தீயோர்
குறித்துமனை யாளரையிற் றுகிலுரிந்து மைவர்மனங் கோபித் தாரோ
பறித்தரிய பொருண்முழுதுங் கவர்ந்தாலு மடித்தாலும் பழிசெய் தாலும்
பொறுத்தவரே யரசாள்வர் பொங்கினவர் காடுறைந்து போவர் தாமே. (17)

தீயோர்—துரியோதனாதியர்கள். மனையாள்–திரௌபதி. ஐவர்—பாண்டவர்கள். திரௌபதியைத் துகிலுரிந்த கதையைப் பாரதம் சபா பருவத்தி லறிக. "பொறுத்தார் அரசாள்வார் பொங்கினர்காடுறைவார்" என்பது பழமொழி.

அள்ளித்தெண் ணீறணியுந் தண்டலையார் வளநாட்டி லாண்மை யுள்ளோர்
விள்ளுற்ற கல்வியுள்ளோர் செல்வமுள்ளோ ரழகுடையோர் மேன்மை நோக்கி
யுள்ளத்தி லழன்றழன்று நமக்கில்லை யெனவுரைத்திங் குழல்வா ரெல்லாம்
பிள்ளைப்பெற் றவர்தமைப்பார்த் திருந்துபெரு மூச்செறியும் பெற்றி யோரே(18)

"பிள்ளைபெற்றவளைப்பார்த்துப் பெருமூச்சுவிட்டாவதென்ன" என்பது பழமொழி.

மண்ணுலகாளவுநினைப்பார்பிறர்பொருண்மேலாசைவைப்பார்வலிமைசெய்வார்
புண்ணியமென் பதைச்செய்யார் கடைமுறையி லலக்கழிந்து புரண்டே போவார்
பண்ணுலவு மொழிபாகர் தண்டலையார் வகுத்தவிதிப் படியல் லாம
லெண்ணமெல்லாம் பொய்யாகு மௌனமே மெய்யாகு மியற்கை தானே. (19)

'எண்ணமெலாம் பொய்யாம் மௌனமாயிருப்பது மெய்யாம்' என்பதுலகர் பழமொழி.

சொன்னத்தைச் சொல்லுமிளங் கிள்ளையென்பார் தண்டலையார் தொண்டு பேணி
யின்னத்துக்கின்னதெனும் பகுத்தறிவொன் றில்லாத வீன ரெல்லாந்
தன்னைத்துக் கண்டவுடன் காணுமென் முறைபேசிச் சாடை பேசி
முன்னுக்கோன் றுயிருந்து பின்னுக்கோன் றுய்நடந்து மொழிவர் தாமே. (20)

கிள்ளை—கிளி. முன்சொன்னதையே பின்னுஞ் சொல்வது கிளியியல்பு. வேறொன்று சொல்லாது. சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளையென்ப தறிக. 'முன்னுக்கொன்றாயிருந்துபேசிப் பின்னுக்கொன்றாகப் பேசுவார்முகத்தில் விழிக்கப்படாது' என்ப துலகர் பழமொழி.

கொடியருக்கு நல்லபுத்தி சொன்னாலுந் தெரியாது கொடையில் லாத
மடையருக்கு மதுரகவி யுரைத்தாலு மவர்கொடுக்க மாட்டார் கண்டீர்
படியளக்குந் தண்டலைநீ ணெறியாரே யுலகமெலாம் பாவி மூடி
விடியன்மட்டு மழைபெயினு மதினோட்டாங் கிஞ்சின்முளை வீசிடாதே. (21)

விடியுமட்டு மழைபெய்தாலு ஓட்டாங்கிளிஞ்சில் முளைக்கமாட்டாது என்பது பழமொழி. ஓட்டாங்கிளிஞ்சில்—ஓட்டைப்போலிருக்கிற கிளிஞ்சிலென்க.

செங்காவி மலர்த்தடஞ்சூழ் தண்டலைநீ ணெறியேநின் செயலுண் டாகி
லெங்காகி லென்னவவ ரெண்ணியவெல் லாமுடியு மில்லை யாகிற்
பொங்காழி சூழுலகி லுள்ளங்கால் வெள்ளெலும்பாய்ப் போக வோடி
யைங்காதம் போனாலுந் தன்பாவந் தன்னுடனே யாகுந் தானே. (22)

'ஐங்காதம் போனாலுந் தன்பாவம் தன்னைவிட்டு நீங்காது'என்பது பழமொழி.

தாயறிவாண் மகளருமை தண்டலைநீ ணெறிநாதர் தாமே தந்தை
யாயறிவா ரெமதருமை பரவையிடந் தூதுசென்ற தறிந்தி டாரோ
பேயறிவார் முழுமூடர் தமிழருமை யறிவாரோ பேசு வாரோ
நாயறியா தொருசந்திச் சட்டிபா னையினந்த ஞாயந் தானே. (23)

"பரவையிடந் தூதுசென்ற தறிந்திடாரோ"என்பதற்கு அந்நாதர், சுந்தரமூர்த்திநாயனார்தமிழ்ப்பாட்டி னருமைகருதி. அந்நாயனார்க்குத் திருவாரூரிற் பரவைநாச்சியாரைச் சேர்த்துவைக்கும்படியாகத் தூது போனதை யுலகினரறியாரோ? என விரித்துரைத்துக்கொள்க. இக்கதையைப் பெரியபுராணம் ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணத்தில் ௩௱௧௪-ம் கவிமுதல், ௩௱௭௪-ம் கவிவரை காண்க. 'நாய்க்குத்தெரியுமோ வொருசந்திப்பானை' என்பது பழமொழி.

கட்டமாங் கனிவாழைக் கனிபலவின் கனிகளுப கார மாகுங்
கிட்டருமவ் வணந்தேடும் பொருளையெல்லா மிரப்பவர்க்கே செலுத்தி வாழ்வார்
மட்டிலெழுஞ் சடையாரே தண்டலையா ரேசொன்னேன் வனக்க டோறு
மெட்டிமரம் பழுத்தாலு மீயாதார் வாழ்ந்தாலு மென்னுண் டாமே. (24)

சிட்டர்—உயர்ந்தோர். 'எட்டிபழுத்தென்ன,ஈயாதார் வாழ்ந்தென்ன'? என்பது பழமொழி. மட்டு—தேன். எட்டி—காஞ்சிரமரம்.

ஓதரிய தண்டலையா ரடிபணிந்து நல்லவனென் றுலகமெல்லாம்
போதமிகும் பேருடனே புகழ்படைத்து வாழ்பவனே புருட னல்லா
லீதலுடனிரக்கமின்றிப் பொன்காத்த பூதமென விருந்தா லென்ன
காதவழி பேரில்லான் கழுதையோ டொக்குமெனக் காண லாமே. (25)

'காதவழி பேரில்லான் கழுதைக்கொப்பாவான்' என்பதுலகர் பழமொழி.

பரியாம விடுஞ்சோறு மூமைகண்ட கனவும்போற் பரிசி லீயா
னரிதான செந்தமிழி னருள்சிறிது மில்லாதா னறியு மோதான்
கரிகாலன் பூசைபுரி தண்டலைநீ ணெறியாரே கதித்த வோசை
தெரியாத செவிடன்கா தினிற்சங்கு குறித்ததெனச் செப்ப லாமே. (26)

அறியுமோ—செந்தமிழை யுரைத்தா லறிவனோ வென்க. கரிகாலன்—ஒருசோழன். பரியாமல்—அன்பில்லாமல். 'செவிடன்காதிற் சங்கூதினது போலாம்' என்பது பழமொழி.

முன்னரிய மறைவழங்குந் தண்டலையா ராகமத்தின் மொழிகே ளாமற்
பின்னுயிரை வதைத்தவனுங் கொன்றவனுங் குறைத்தவனும் பெற்று ளோனு
மன்னெறியே சமைத்தவனு முண்டவனு நரகுறுவ ராத லாலே
தன்னுயிர்போ லெந்நாளு மன்னுயிருக் கிரங்குவதுந் தக்க தாமே. (27)

அன்னெறி—நெறியல்லாநெறி. 'தன்னுயிர்போல மன்னுயிர்க்கிரங்க வேண்டும்' என்பது பழமொழி.

உருவெடுத்த நாண்முதலா வொருசாணும் வளர்க்கவுட லுழல்வ தல்லான்
மருவிருக்கு நின்பாத மலர்தேடித் தினம்பணிய மாட்டே னந்தோ
திருவிளக்கு மணிமாடத் தண்டலைநீ ணெறியேயென் செய்தி யெல்லாஞ்
சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லாத் தன்மை தானே. (28)

'சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லை' என்பது பழமொழி. சாண் என்றது ஈண்டுச் சாணளவுகொண்டவயிற்றைக் குறித்து நின்றது.

காதிலே திருவேடங் கையிலே செபமாலை கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கண் மனதிலே கரவடமாம் வேட மாமோ
வாதிலே யயன்றேடுந் தண்டலைநீ ணெறியாரே மனிதர் காணும்
போதிலே மவுனமிராப் போதிலே ருத்ராக்கப் பூனை தானே. (29)

காவடம்—கள்ளம். 'உருத்திராக்கப்பூனைபோலிருக்கிறு' னென்ப துலகர் பழமொழி. பூனைக்கு ருத்திராக்கத்தைக் கழுத்திற்கட்டியிருந்தா லது கொலைசெய்யா திருக்குமோ? வழக்கப்படி கொலைசெய்யுமென் றறிக.

மானென்று வடிவெடுத்து மாரீசன் போய்மடிந்தான் மானே யென்று
தேனென்று மொழிபேசிச் சீதைதனைச் சிறையிருக்கத் திருடிச் சென்றோன்
வானென்று மாசிழந்தான் றண்டலையார் திருவுளத்தின் மகிமை காணீர்
தானென்று நினைக்கையிலே தெய்வமொன்று நினைப்பதுவுஞ் சகசந் தானே.(30)

சீதாபிராட்டியை மயக்கநினைத்துச்சென்ற மாரீசன், இராமபிரானம்பா லிறந்தான். இக்கதை இராமாயணம் ஆரணியகாண்டம் மாரீசன் வதைப்படலத்தி லறிக. திருடிச்சென்றோன்—இராவணன். 'தானென்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' என்பது பழமொழி. சகசம்—இயல்பு.

கைசொல்லும் பனைகாட்டுங் களிற்றுரியார் தண்டலையார்க் காணர் போலப்
பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமுங் கிடையாது பொருணில்லாது
மைசொல்லுங் காரளிசூழ் தாழைமலர் பொய்சொல்லி வாழ்ந்த துண்டோ
மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி வாழ்வதிலை மெய்ம்மை தானே. (31)

யானைக்கைக்குப் பனை யுவமானமென்க.

தாழைமலர் பொய்சொன்னதாவது:—பிரம விட்டுணுக்களிருவரும், நானேபெரியவன் நானேபெரியவனென வாதிட்டுப்போர்செய்யும்போது, அப்பகையை நீக்கச்சிவபிரா னக்கினிமலையா யெழுந்து நிற்க,இருவரும் இதனடிமுடியைக் கண்டவரே பெரியவரென்று பிரமதேவர் அன்னமாய் முடியையும், விட்டுணுமூர்த்தி பன்றியா யடியையுந் தேடச்சென்றார்கள். விட்டுணுமூர்த்தி யடி காணாது வந்துநின்றார். பிரமதேவர் முடிகாணாது வருந்திவரும்போது, சிவபிரான் திருமுடியிலிருந்து ஒருதாழம் பூ, கீழே வீழ்ந்துவந்தது. பிரமதேவர் அதனைக்கண்டு திருமுடியைத் தாம் கண்டதாகப் பொய்சொல்லும்படி வேண்ட, அத் தாழம்பூவும் அவ்வாறே வந்து சொல்லியது. சிவபிரா னுடனே தாழம்பூவைநோக்கி இனி நமக் கனிதற்காகா யென்று நீக்கி விட்டார். அருணாசலபுராணம் திருமலைச்சருக்கத்திற் காண்க. 'மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி வாழ்வனோ'? என்பது பழமொழி.

அந்தணரை நல்லவரைப் பரமசிவ னடியவரை யகந்தை யாலோர்
நிந்தனைசொன் ஞலுமென்ன வைதாலு மென்னவதி னிடேத முண்டோ
சுந்தரர்க்குத் தூதுசென்ற தண்டலைநீ ணெறியாரே துலங்கும் பூர்ண
சந்திரனைப் பார்த்துநின்று நாய்குரைத்த போதிலென்ன தாழ்ச்சி தானே. (32)

'நிஷேதம்-தள்ளப்படுவது என்க. 'சந்திரனைப்பார்த்து நாய்குரைத் தாலாவதென்ன'? என்பது பழமொழி.

கோடாமற் பெரியவர்பா னடப்பதன்றிக் குற்றமுடன் குறைசெய் தோர்க
ளாடாகிக் கிடந்தவிடத் ததன்மயிருங் கிடவாம லழிந்து போவார்
வீடாநற் கதியுதவுந் தண்டலையா ரேசொன்னேன் மெய்யோ பொய்யோ
கோடாலிக் காம்பேதன் குலத்தினுக்குக் கேடான கொள்கை தானே. (33)

கோடாமல்—கோணுமல். ஆடாகி—ஆட்டுச்சென்மமாகி. 'கோடாலிக் காம்பு குலத்துக்கீனம்' என்பது பழமொழி. மரக்கிளையாகிய கோடா லிக்காம்பே தன்னினமாகிய மரத்தைவெட்டுதற் குதவியாயிருத்தல் காண்க.

சின்னமெங்கே கொம்பெங்கே சிவிகையெங்கே பரியெங்கே சிவியா ரெங்கே
பின்னையொரு பாழுமில்லை நடக்கைகுலைந் தாலுடனே பேயே யன்றோ
சொன்னவிலுந் தண்டலையார் வளநாட்டிற் குங்குலியத் தூபங் காட்டுஞ்
சன்னதமா னதுகுலைந்தாற் கும்பிடெங்கே வம்பரிது தனையெண் ணரே. (34)

சிவியார்—ஓர்சாதியார். இவர் பல்லக்குச்சுமப்பவரெனக் கொள்ளல் வேண்டும். 'சன்னதங்குலைந்தாற் கும்பிடெங்கேகிடைக்கும்' என்பது பழமொழி. நடக்கை—நல்லொழுக்கம்.

சிறுபிறைதுன் னியசடையார் தண்டலைசூழ் பொன்னிவளஞ் செழித்த நாட்டிற்
குறையகலும் பெருவாழ்வு மைந்தருமக் களும்பொருட்டாக் குறித்திடாமன்
மறைபயில்பத் திரகிரியும் பட்டினத்துப் பிள்ளையுஞ்சேர் மகிமை யாலே
துறவறமே பெரிதாகுந் துறவிக்கு வேந்தனொரு துரும்பு தானே. (35)

பத்திரகிரி—இவர் ஓரரசர். பட்டினத்தடிகளுடன் றுறவுபூண்டு அவ்வடிகளருள் பெற்றவர்; 'துறவிக்கு வேந்தன் றுரும்பு' என்பது பழமொழி. "போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு வீரருக்குச்—சேர்ந்த மரணஞ் சிறுதுரும்பா—மாய்ந்த—வறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில் லத்-துறவிக்கு வேந்தன் றுரும்பு" என்று ஔவையாருங் கூறிய தறிக.

பேரிசைக்குஞ் சுற்றமுடன் மைந்தருமா தருஞ்சூழப் பிரபஞ் சத்தே
பாரியையுற் றிருந்தாலுந் திருநீற்றிற் கழற்காய்போற் பற்றில் லாமற்
சீரிசைக்குந் தண்டலையா ரஞ்செழுத்தை நினைக்கின்முத்தி சேரலாகு
மாரியக்கூத் தாடுகினுங் காரியமேற் கண்ணாவ தறிவு தானே. (36)

பாரி–மனையாள். 'ஆரியக் கூத்தாடினாலுங் காரியத்திலே கண்ணாகி யிருக்கவேணும்' என்பது பழமொழி. அஞ்செழுத்து–சிவமூலமந்திரமாகிய பஞ்சாக்கரம்.

இரந்தனையித் தனைநாளும் பரந்தனைநா னென்றலைந்தா யினிமே லேனுங்
கரந்தைமதி சடையணியுந் தண்டலைநீ ணெறியாரே காப்பா ரென்னு
முரந்தனைவைத் திருந்தபடி யிருந்தனையே லுள்ளவெலா முண்டா முண்மை
மரந்தனைவைத் தவர்நாளும் வாடாமற் றண்ணீரும் வார்ப்பர் தாமே. (37)

இரந்தனை–யாசித்தாய். பரந்தனை–பரம்பொருளை. உரம்–ஞானம், வலிமையு மாம். 'மரம்வைத்தவன் தண்ணீர்விடுவான்' என்பது பழமொழி. இக்கவி தன்மனத்தைநோக்கிக்கூறிய தென்க.

நாற்கவியும் புகழவருந் தண்டலையார் வளநாட்டி னல்ல நீதி
மார்க்கமுட னடந்தசெங்கோல் வழுவாமற் புவியாளும் வண்மை செய்த
நீர்க்கமுள்ள வரசனையே தெய்வமென்பார் கொடுங்கோன்மை செலுத்தி நின்ற
மூர்க்கமுள்ள வரசனுந்தன் மந்திரியு மாழ்நரகின் மூழ்கு வாரே. (38)

நாற்கவி–கவி, கமகன், வாதி, வாக்கி, என நான்குவகைப் புலவர்கள். 'நீதிமன்ன னிலத்துக்குத் தெய்வம்' என்ப துலகர் பழமொழி. "குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற–புதல்வர்க்குத் தந்தையுந் தாயு–மறவோர்க்–கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ–மிலே முகப் பைம்பூ ணிறை" என நீதிநெறிவிளக்கத்தினுங் காண்க.

ஓதரிய வித்தைவந்தா லுரியசபைக் கழகாகு முலகில் யார்க்கு
மீதலு னறிவுவந்தா லினிபகுணங் களுக்கழகா யிருக்கு மன்றே
நீதிபெறு தண்டலையார் திருநீறு மெய்க்கழகாய் நிறைந்து தோன்றுங்
காதிலணி கடுக்கனிட்டான் முகத்திலுக்கே யழகாகிக் காணுந் தானே. (39)

'காதுக்கணியிட்டால் முகத்திற் கழகாகும்' என்ப துலகர் பழமொழி.

பாதியா ரண்ணாவி புலவரென்பார் கல்வியினிற் பழக்க மில்லார்
சேதியார் தனையறியார் பல்லக்கே றவர்புலமை செலுத்திக் கொள்வா

ராரணியுந் தண்டலைநீ ணெறியாரே யிலக்கணநூ லறியாரேனுங்
காரிகையா கிலுங்கற்றுக் கவிசொல்லார் பேரிகொட்டக் கடவர் தாமே. (40)

ஆர்—ஆத்திப்பூ. 'காரிகை கற்றுக் கவிசொல்ல மாட்டார் பேரிகை தட்டிப்பிழைப்பது நன்று' என்பது பழமொழி.

அருண்மிகுத்த வாகமநூல் படித்தறியார் கேள்வியையு மறியார் முன்னே
யிருவினையின் பயனறியார் குருக்களென்றே யுபதேச மெவர்க்குஞ் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீ ணெறியாரே யவர்கிரியா மார்க்க மெல்லாங்
குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி காட்டிவருங் கொள்கை தானே.(41)

'குருடனுக்குக் குருடன் வழிகாட்டினதுபோல என்பது பழமொழி.

நேற்றுள்ளா ரின்றிருக்கை நிச்சயமோ வாதலினு னினைந்த போதே
யூற்றுள்ள பொருளுதவி யறந்தேடி வைப்பதறி வுடைமை யன்றோ
கூற்றுள்ள மலையவருந் தண்டலையா ரேசொன்னேன் குடபால் வீசுங்
காற்றுள்ள போதெவருந் தூற்றிக்கொள் வதுநல்ல கருமந் தானே. (42)

கூற்று—இயமன். 'காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்' என்பது பழமொழி.

வர்க்கத்தார் தமைவெறுத்த விருத்தருமாய் மெய்ஞ்ஞான வடிவ மானோர்
கற்கட்டா கியமடமுங் காணியுஞ்செம் பொனுந்தேடுங் கரும மெல்லாம்
பொற்கொத்தாஞ்செந்நெல்வயற்றண்டலையாரேசொன்னேன்பொன்னுடாகுஞ்
சொற்கத்தே போம்போதுங் கக்கத்தே ராட்டினத்தைச் சுமந்த வாறே. (43)

வர்க்கத்தார் என்றது சுற்றத்தாரை. காணி—நிலம். 'சொர்க்கத்திற்குப் போகிறவள் கக்கத்திலே இராட்டினத்தை யெடுத்ததுபோலிருக்கிறது' என்ப துலகர் பழமொழி. இது அருகிவழங்குகிறது. கக்கம்—கையடியின் கீழ்ப்பக்கம். இராட்டினம்—நூல்நூற்குங் கருவி.

ஆம்பிள்ளா யெனக்கொடுக்கும் பெரியோரை யடுத்தவர்க ளவனிக் கெல்லா
நாம்பிள்ளா யதிகமென்பார் நண்ணரு மேவல்செய நாளும் வாழ்வார்
வான்பிள்ளா யெனுமேனித் தண்டலையார் பூடணமாய் வளர்ந்த நாக
மேன்பிள்ளாய் கருடாநீ சுகமோவென் றுரைத்தவித மென்ன லாமே. (44)

பிள்ளையென்னும் பதம் விளிக்கும்போது பிள்ளாய் என வரும். நண்ணார்—பகைவர். வான்பிள்ளாயெனுமேனி—பாமாகாயத்தினின்றும் விலகாய் என்னுந் திருவுருவத்தைபுடைய. பூடணம்—ஆபரணம்.

நாகம், கருடா! சுகமா எனக் கேட்டதாவது. கருடனுக்குப்பயந்து நாகங்கள் காஞ்சியிற் சிவலிங்கப்பதிட்டைசெய்து பூசித்து வேண்டச் சிவபிரான் அந்நாகங்களை ஆபரணமாகப் பூண்டார். ஓர்காலத்தில் திருமாலைத் தாங்கிவந்தகருடனை,நாகங்கள்பார்த்து,"துன்னு வெம்பகைக் கலுழனைக் கலுழனே சுகங்கொலென் றஞ்சாமே-பன்னி மேன்மையின் விணுயின விம்மொழி பாரெலாமெடுத் தேத்தும்" என்பதனு லறிக. (காஞ்சிப்புராணம் பணாதரீச்சரப்படலம்.)

வடியிட்ட புல்லர்தமை யடுத்தாலும் விடுவதுண்டோ மலிநீர்க் கங்கை
முடியிட்ட தண்டலைநா தரைப்புகழிற் பெருவாழ்வு முழுது முண்டா
மிடியிட்ட வினைதீர்க்குந் தெய்வ மிட்டு விடியாமல் வீணர் வாயிற்
படியிட்டு விடிவதுண்டோ வவாருளே கண்ணுகப் பற்று வீரே. (45)

வடியிட்ட புல்லர்-தெளித்தெடுத்தபுல்லர். விடிதல்-ஈண்டு வறுமை தொலைதலென்க. மிடி-தரித்திரம். தெய்வமிட்டு—தெய்வங்கொடுத்து. படியிட்டு-படிகொடுத்து. 'ஆருக் காரிட்டுவிடியுந் தெய்வமிட்டால் விடியும்' என்ப துலகர் பழமொழி.

பொலியவளம் பலதழைத்த தண்டலைநீ ணெறிபாதம் போற்றி நாளும்
வலியவறஞ் செய்தறியீர் மறஞ்செய்வீர் நமன்றூதர் வந்து கூடி
மெலியவுறைத் திடும்பொழுது கலக்கண்ணீ ருகுத்தாலும் விடுவ துண்டோ
வெலியழுது புலம்பிடினும் பூனைபிடித் ததுவிடுமோ வென்செய் வீரே. (46)

மறம்-பாவம். 'எலி யழுது புலம்பினுலும் பூனைபிடித்தது விடாது' என்பது பழமொழி.

மற்றவரோ தமிழ்பாடி நாட்டவல்லார் நக்கீரர் வலிய ராகி
வெற்றிபுனை மீனுட்சி சுந்தரநா யகரடுத்து விளம்பும் போதிற்
பற்றலர்தண் டலைவாழுங் கடவுளென்றும் பாராமற் பயப்ப டாம
னெற்றிவிழி காட்டுகினுங் குற்றமே குற்றமென நிறுத்தி னரே. (47)

நக்கீரர்-கடைச்சங்கப்புலவர்.

நெற்றிவிழிகாட்டுகினுங் குற்றம் குற்றமேயென நிறுத்தியது:-சொக்கநாதருக்குச் சண்பகமாலைசாத்தும் பணிசெய்கிற காரணத்தாற் சண்பகமாறனென்னும் பெயர்பெற்ற வங்கிபசூடாமணிப்பாண்டியன், வசந்தகாலத்தின் மனையாளுடன் சோலையிலிருக்கும்போது ஒரு வாசனையுண்டாக, இது மலர்வாசமன்று, மனையாள்கூந்தலிலுள்ளவாசனை யென்று

தெரிந்துகொண்டு, "என்மனத்திற் கருதியதை யுரைத்தவர்கள், இதை யெடுத்துக்கொள்க" வென்று சங்கத்தார்சபையி லொரு பொற்கிழிகட்டித் தூக்கினன். அப்போது தருமியென்னும் பிரமசாரி தனக்கு விவாகஞ் செய்வதற்காகச் சுவாமியைவேண்டச் சுவாமி, "கொங்குதேர் வாழ்க்கை" யென்னும் முதற்குறிப்புள்ளபாடலை யெழுதிக்கொடுத்தார். அப்பாடலைத் தருமி சங்கத்திற் கொடுத்துப் பொற்கிழியறுக்கப் புகும் போது, நக்கீரர், கவியிற் குற்றமுளதென்று தடைசெய்தார்; உடனே தருமி சுவாமியிடஞ் சென்று விண்ணப்பஞ்செய்யச் சுவாமி யொருபுலவ ருருக்கொண்டுவந்து நங்கவிக்குக் குற்றங் கூறினர் யாவரென்று வினவக் கீரனர் நானேயெனக் கூறினர். சுவாமி குற்றமென்னவென்றார்; கீரனர் கூந்தலுக் கியற்கைவாசனையுண்டெனக் கூறியிருக்கிறது; அதற்குச் செயற்கைவாசனையன்றி யியற்கைவாசனை யில்லை யென்றார். சுவாமி, பதுமினியாகிய முதற்சாதிப்பெண்கள்கூந்தலுக் குண்டே யென்றார்; நக்கீரர் அதற்கு மில்லை யென்றார். சுவாமி, தேவமங்கையர் கூந்தலோ வென்றார்; நக்கீரர், அதற்கும், கற்பகமாலையணிந்த செயற்கையாலே மண முண்டாமன்றி யியற்கைவாசனையில்லை யென்றார். சுவாமி, நீர்வழிபடுங் காளத்தி ஞானப்பூங்கோதையார்கூந்தலோ வென்றார். நக்கீரர் அதுவு மங்ஙனமே யென்றார். சுவாமி, தன்னை யின்னரென்று தெரிவித்தற்காக நெற்றிக்கண்ணைக் காட்டினர்; நக்கீரர், நெற்றிக்கண்காட்டினலுங் குற் றங் குற்றமே யென்றார். திருவிளையாடற்புராணம் தருமிக்குப் பொற் கிழியளித்தபடலத்திற் காண்க.

சீரிலகுந் தண்டலையார் திருவருளா லகமேறிச் செழித்த நாளிற்
பாரியென வாயிரம்பேர்க் கன்னதா னங்கொடுக்கும் பலனைப் பார்க்க
நேரிடும்பஞ் சந்தனிலே யெவ்வளவா கிலுங்கொடுத்தா னீதி யாகு
மாரிபதின் கலநீரிற் கோடைதனி லொருகுடநீர் வண்மை தானே. (48)

அஃகம் என்பதை அகமெனக்கூறினர். அது தானியமெனக். 'மழைக்காலத்திற் பதின்கலநீர்வார்ப்பதினுங் கோடைகாலத்தி லொரு குடநீர்வார்த்தாற்போதும், என்பது உலகர்பழமொழி.

பிறக்கும்போ தொருபொருளுங் கொடுவந்த தில்லையுயிர் பிறந்து மண்மே
லிறக்கும்போ திலுங்கொண்டு போவதில்லை யென்றுசும்மா விருந்து வீணே
சிறக்குந்தா யினுமருள்வார் தண்டலையிற் சோமற் றேச மெல்லாம்
பறக்குங்கா கமிருக்குங் கொம்பறியா தெனத்திரிந்தோர் பய்ன்பெ ருரே. (49)

'பறக்குங்காக மிருக்குங்கொம்பறியாது' என்பது பழமொழி. முன்னிரண்டடியின்கருத்தைப் "பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்துமண்மே-லிறக்கும்பொழுது கொடுபோவ தில்லை"எனப் பட்டினத் தடிகள் திருவாக்கினுங் காண்க.

வைதிடினும் வாழ்த்திடினு மின்பதுன்பம் வந்திடினும் வம்புகோடி
செய்திடினுந் தண்டலைநீ ணெறியார்தஞ் செயலென்றே தெளிவதல்லான்
மெய்தவிர வவர்செய்தா ரிவர்செய்தா ரெனநாடி வெறுக்க லாமோ
வெய்தவர்த மருகிருக்க வம்பைநொந்த கருமமென்ன வியம்பு வீரே. (50)

'எய்தாரிருக்க அம்பை நொந்தாவ தென்ன' என்பது பழமொழி.

வாங்கால முண்டசெழுந் தண்டலையா ரடிபோற்றி வணங்கி நாடிப்
போங்காலம் வருமுன்னே புண்ணியஞ்செய் தரியகதி பொருந்து றும
லாங்கால முள்ளவெலாம் விபசார மாகியறி வழிந்து வீணே
சாங்காலஞ் சங்கரா சங்கரா வெனின்வருமோ தருமந் தானே. (51)

'ஆங்கால மவிசாரியாடிச் சாங்காலஞ் சங்கராவென்கிறாள்' என்பது பழமொழி.

சுற்றமாய் நெருங்கியுள்ளார் தமையடைந்தார் கற்றறிந்தார் துணைவே றில்லா
ருற்றவே தியர்பெரியோர்க் குதவியன்றிப் பிறர்க்குதவு முதவி யெல்லாஞ்
சொற்றநான் மறைபரவுந் தண்டலையா ரேசொன்னேன் சுமந்தே நொந்து
பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோ சனநடத்தும் பெருமை தானே. (52)

'பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோசனஞ் செய்ததுபோல்' என்பது பழமொழி.

துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலு மறந்துவிட்டுத் துடுக்கே செய்வார்
சன்மார்க்கர்க்கொருவார்த்தைசொலுமளவேமெய்யதனிற்றமும்பாக்கொள்வார்
பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையா ரேசொன்னேன் பதமே யான
நன்மாட்டுக் கோரடியா நற்பெண்டீர்க் கொருவார்த்தை நடத்தை யாமே. (53)

பதம்—பக்குவம். 'நன்மாட்டுக்கோரடி நற்பெண்டீர்க் கொருவார்த் தை' என்பது பழமொழி.

காப்பார்க்கு நல்லகதி வருவதில்லை செங்கோலிற் கடல்சூழ் வையம்
புரப்பார்க்கு முடிவிலே சுவர்க்கமல்லா னரகமில்லை பொய்யி தன்று
வுரப்பார்க்கு நலம்புரியுந் தண்டலையா ரேசொன்னே னொருநாளை யாக
விரப்பார்க்கு வெண்சோறு பஞ்சமுண்டோ வொருக்காலு மில்லை தானே. (54)

'உரப்பார்க்கு' என்பது வலித்தல்விகாரம் பெற்றது. 'இரப்பார்க்கு வெண்சோறு பஞ்சமா' என்பது பழமொழி.

படுங்கோல மறியாமற் றண்டலையார் திருப்பணிக்கும் பங்கஞ் செய்வார்
நெடுங்கோளுந் தண்டமுமா வீணுக வீணனைப்போ னீதிசெய்வார்
கெடுங்கோப மல்லாமல் விளைவுண்டோ மழையுண்டோ கேள்வி யுண்டோ
கொடுங்கோன்மன் னவனாட்டிற் கடும்புலிவா ழுங்காடு குணமென் பாரே. (55)

வீணன் நீதிசெலுத்தியது:—தஞ்சாவூர்ஸமஸ்தானத்திலே வேலைபெறக் காத்திருந்த வீணனென்பானொருவன், வேலைகிடையாமல் தானே யோசித்து மயானத்திற்குப்போகிறவழியிலிருந்துகொண்டு, அங்குவருகிற சவமொன்றுக்குப் பணமைந்து வாங்கும்படி இராச உத்தரவென்று, நெடுநாள் வாங்கிச் சீவனம்பண்ணி மிகுந்தபணம் சேர்த்து வைத்திருந்தான். அரசன் ஒருநாளிரவு நகர்சோதனைக்குவரும்போது, ஒரு ஏழையின்வீட்டில் ஒருபெண் "எனக்கொன்று மென்னையகர் வைத்திறக்கவில்லையானாலும் வீணனுக்குப் பணங்கொடுப்பதற் கென்செய்வே"னென் றழுதாள். அரசன் இவ்விஷயமறிந்து வீணனென்பவன் யாரென்று, அவனை வரவழைத்து விசாரிக்கும்போது, அவ னிகழ்ந்ததை யெடுத்துக்கூறி மிஞ்சியபண மிவ்வளவிருக்கிறது; "சனங்கட்குபகாரமாக வொருநதி வெட்டிவிடவேண்டுமென நினைத்திருக்கிறேன்" என்றான். அரசன் அவன்மூடச்செயலைவியந் தவ்வாறு செய்வாயெனப் போயினன். வீணன் காவிரியிலிருந்து பிரித்து ஒருநதிவெட்டி விட்டான். அது இன்றும் வீணாறெனப் பெயர்பெற்று ஒரு பெருங்காலாகப்போய்க்கொண்டிருக்கிறது. 'கொடுங்கோன் மன்னர் வாழு நாட்டிற்—கடும்புலி வாழுங் காடு நன்றே' என்பது பழமொழி.

உள்ளவரைக் கெடுத்தோரு முதவியற்று வாழ்ந்தோரு முறைபெற் றோருந்
தள்ளிவழக் குரைத்தோருஞ் சற்குருவைப் பழித்தோருஞ் சாய்ந்தே போவார்
பள்ளவயற் றண்டலையார் பத்தரடி பணிந்தோரும் பாடி னோரும்
பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்ட நல்லோரும் பெருகு வாரே. (56)

உறை—பொருள். 'பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்ட நல்லோரும் பெருகிவாழ்வார்' என்பது பழமொழி.

விற்பனர்க்கு வாழ்வுவந்தால் மிகவணங்கிக் கண்ணோட்ட மிகவுஞ் செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தாற் கண்டெரியா திறுமாந்து துன்பஞ் செய்வார்

பற்பலர்க்கு வாழ்வுதருந் தண்டலையா ரேசொன்னேன் பண்பில் லாத
வற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத் திரிகுடைமே லாகுந் தானே. (57)

கண்ணோட்டம்-தாட்சணியம். 'அற்பனுக்கு வாழ்வுவந்தா லர்த்த ராத்திரியுங் குடைபிடிப்பான்' என்பது பழமொழி.

விசையமிகுந் தண்டலையார் வளநாட்டி லொருத் தர்சொல்லை மெய்யா வெண்ணி
வசைபெருக வரியாயஞ் செய்துபிறர் பொருளையெல்லாம் வலிய வாங்கித்
திசைபெருகுங்கீர்த்தியென்றுந்தன்மமென்றுந்தானமென்றுஞ்செய்வதெல்லாம்
பசுவினையே வதைசெய்து செருப்பினைத்தா னங்கொடுக்கும் பண்பு தானே.(58)

'பசுவைக்கொன்று செருப்பைத் தானம்பண்ணினதுபோலாம்' என்பது பழமொழி.

சிறியவரா முழுமூடர் துரைத்தனமா யுலகாளத் திறம்பெற்றாலு
மறிவுடையார் தங்களைப்போற் சற்குணமுள் ளுடையோர்களாக மாட்டார்
மறிதருமான் மழுவேந்துந் தண்டலையா ரேசொன்னேன் வாரி வாரிக்
குறணிமைதா னிட்டாலுங் குறிவடிவங் கண்ணாகிக் குணங்கொ டாதே. (59)

'குறுணிமையிட்டாலும் குறிவடிவங் கண்ணாமா' என்ப துலகர் பழமொழி. இது அருகிவழங்குகிறது. குறிவடிவம்-கண்ணைக் குறித்துச் செய்துவைத்தவடிவம்.

கற்றவர்க்குக் கோபமில்லை கடந்தவர்க்குச் சாதியில்லை கருணை கூர்ந்த
நற்றவர்க்கு விருப்பமில்லை நல்லவருக் கொருகாலு நரக மில்லை
கொற்றவருக் கடிமையில்லை தண்டலையார் மலர்ப்பாதங் கும்பிட் டேத்தப்
பெற்றவர்க்குப் பிறப்பில்லை பிச்சைச்சோற் றினுக்கில்லை பேச்சுத் தானே.(60)

'பிச்சைச் சோற்றினுக்கு மறுபேச்சில்லை' என்ப துலகர் பழமொழி. கொற்றவர்-அரசர். அடிமை-அடிமைத்தன்மை.

பரக்கருணை வடிவாகுந் தண்டலையார் வளநாட்டிற் பருவஞ் சேர்ந்த
சரக்குலவு காமகலை தனையறிந்த வதிருபத் தைய லாரை
வரம்புறுதா ளாண்மையில்லா மட்டிகளுக் கேகொடுத்தால் வாய்க்கு மோதான்
குரங்கினது கையினதும் பூமாலை தனைக்கொடுத்த கொள்கை தானே. (61)

சரம்-பாணம். காமகலை-மதனநூல். 'குரங்கின்கையிலே பூமாலை கொடுத்ததுபோல' என்பது பழமொழி.

உ

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921-௵ ஜூலைமாத வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1921 July | | | 1920 July | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) Donations, Contributions வகையில் வரவு ... | 100 | ... | ... | | | |
| (2) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் வித்தவகையில் வரவு. | 62 | 1 | ... | | | |
| (3) Miscellaneous வரவு... | 8 | 9 | 6 | | | |
| மொத்தம் ... | 170 | 10 | 6 | 1483 | 9 | 2 |
| II Editorial Section: | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களிடமிருந்து சந்தாவரவு | 5 | ... | ... | | | |

| விவரம் | செலவு 1921 July | | | 1920 July | | |
|---|---|---|---|---|---|---|
| I General Section: | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 123 | 10 | 8 | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) கலாசாலை மாணவர்கட்குப் போஷணைக்காகச்செல் ... | 26 | 13 | ... | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 31 | 9 | 9 | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 24 | 12 | 3 | | | |
| (3) புத்தகசாலைக்குப் புத்தகம் வாங்கிய வகையிலும், பத்திரிகைக்குச் சந்தாச்செலுத்தியவகையிலும் செலவு. ... | 20 | 12 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 45 | 10 | ... | | | |
| (3) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்றவகையில் வரவு ... | 10 | 12 | ... | | | |
| மொத்தம் ... | 61 | 6 | ... | 70 | ... | ... |
| III Press Section: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்வில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 186 | 9 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (4) சங்கக் கட்டட வகையரா ரிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | 45 | 1 | 9 | | | |
| (5) தபால், தந்திவகையில் செலவு ... | 15 | 6 | 6 | | | |
| (6) சங்க சில்லரைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங் கூலிவகையிற் செல் ... | 6 | ... | ... | | | |
| மொத்தம் ... | 401 | 1 | 11 | 1295 | 12 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) ஷைவேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 34 | ... | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீசில் நடந்த வேலைகளுக்குப் பைண்டிங்சார்ஜ் வரவு ... | 88 | 13 | ... | | | |
| (3) Miscellaneous வரவு... | ... | 3 | ... | | | |
| மொத்தம் ... | 259 | 9 | ... | 25 | 4 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| II EDITORIAL SECTION: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப்பத்திரிகை, சங்கப்பதிப்புப்புத்தகம் இவற்றின் பிரசுர சம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகைக்குச்செல்... | 31 | 12 | ... | | | |
| (3) தபால், தந்திவகையிற்செல் | 12 | 9 | 6 | | | |
| மொத்தம் ... | 79 | 5 | 6 | 51 | 2 | ... |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 143 | 14 | 9 | | | |
| (2) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 42 | 15 | 9 | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 29 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரு ... | 491 | 9 | 6 | 1578 | 13 | 2 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையி ருப்புத்தொகை ... | 1081 | 5 | 2 | 341 | 1 | 8 |
| ஆகமொத்தம் ரு ... | 1572 | 14 | 8 | 1919 | 14 | 10 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (2) Contingencies வாங்கிய வகையிற் செலவு ... | 23 | 9 | 7 | | | |
| மொத்தம் ... | 239 | 8 | 1 | 396 | 5 | 11 |
| ஆக மொத்தம் செலவு ரு ... | 719 | 15 | 6 | 1748 | 3 | 11 |
| மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | 852 | 15 | 2 | 176 | 10 | 11 |
| ஆகமொத்தம் ரு ... | 1572 | 14 | 8 | 1919 | 14 | 10 |

| | |
|---|---|
| *By C Pass Book | 550—0—0 |
| Cash on hand | 302-15—2 |
| | 852-15—2 |

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**

AUDITOR,

13—8—21.

**LAKSHMINARAYANAN,**

*Manager,*

MADURA TAMIL SANGAM.

10—8—21.

உ

# வேதபிரோ, குன்னூர், நீலகிரி.

---

வேதபிரோவுக்காக ஒரு அச்சுக்கூடம் ஸ்தாபித்து வேதங்களை விரைவாக வெளிப்படுத்தும் நோக்கத்தோடு இருநூறு சாசுவத சந்தாதாரர்களைப் பின்வரும் சந்தாவிகிதப்படி சேர்த்துக்கொள்ள ஏற்பாடாயிருக்கிறது. விடுதிச் சஞ்சிகைகளாக வேண்டுவோர்க்கு ரூ 50. பயின்டு புத்தகங்களாக விரும்புவோர்க்கு ரூ 60. இவ்விருநூறுசந்தாதாரர்கள் சேர்ந்தபின்னர்ச் சேர்பவர்களுக்கு இச்சந்தாத்தொகை இரட்டிக்கப்பெறும். இவர்களுக்கு எல்லாவேதங்களும் தமிழில் மொழிபெயர்த்து அனுப்பப்பெறும். வேதஸஞ்சிகையின் மூன்றும்வருஷம் நடப்பு. அது சென்னைக் கல்விஇலாகாவின் ஆதரவிலுள்ளது. ரிக்வேதத்தில் மூன்று அஷ்டகங்களும், யஜுர்வேதத்தில் மூன்று பிரபாடகங்களும் ஏற்கனவே வெளிவந்திருக்கின்றன.

விலாசம்—

மானேஜர்,

வேதபிரோ, குன்னூர், R. S. நீலகிரி.